*Muslim muracu*

*Malar 2, ital 8*

*February 1950*

Record no. 215

# எங்கள் நன்றி

*

சென்ற டிசம்பர், ஜனவரி மாதங்களின் விசேஷ மலர் களாக வெளிவந்த இரண்டு இதழ்களையும் படித்துவிட்டு அவைகளின் சிறப்பியல்புகளையும் சிறந்த கட்டுரைகளையும் பற்றி இதய பூர்வமாகப் பாராட்டி எழுதிய அன்பர்கள் அனைவருக்கும் நமது நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

"அரசியல், சமய, சமுதாயப் பிரச்னைகளை முஸ்லிம் முரசு தீர்க்கமாக விவாதிக்கிறது; தயவு தாட்சண்யமின்றி எழுதுகிறது; உள்ளத்திலே தைக்கும்படியான உறுதியான தமிழ் நடையில் வன்மையுடன் விறுவிறுப்பாக வரைகிறது. எனவே, உங்கள் முரசை வளர்ப்போம்" என்று உறுதிகூறி எழுதுகின்றார்கள் எத்தனையோ வாசகர்கள். இவர்களின் அன்புக்கும் ஆசைக்கும் எங்கள் நன்றியையும் வாழ்த்துக்களையும் மீண்டும் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

சென்ற மாத 'மீலாத் மலர்' அதிகமாக வேண்டுமென்று மீண்டும் கேட்ட ஏஜெண்டுத் தோழர்களுக்கு அவர்கள் விரும்பியவாறு அதிகப் பிரதிகள் அனுப்பிவைக்க முடியாமற் போனமைக்கு மன்னிக்க வேண்டுகிறோம்.

—மனேஜர்

# முஸ்லிம் முரசு



அன்பும் இன்பமும் அறிவும் ஆற்றலும் பண்பும் புகழும்
இன்ப வாழ்வும் இனிது விளங்க முரசு முழங்கவே !

கௌரவ ஆசிரியர் : அல்ஹாஜ் வ. மி. ஷம்சுத்தீன்

| மலர் 2 | சென்னை, பிப்ரவரி 1950 | இதழ் 8 |
|---|---|---|


## பொருளடக்கம்



# மக்களின் ஆட்சி மலர வேண்டும்

சென்ற இருநூறு ஆண்டுகளாக அந்நியர் ஆட்சியில் அடிமைப்பட்டுக்கிடந்த நம் இந்தியத் துணைக்கண்டம், 1947-ஆகஸ்ட் 15-ந் தேதி யன்று விடுதலைப் பெற்றது. சென்ற இரண்டு ஆண்டுகளாகச் சுதந்தர இந்தியாவின் புதிய அரசியல் சட்டம் புதுடில்லியிலே உருவாக்கப்பெற்று வந்தது. அது முற்றுப்பெற்று அரங்கேறியவுடன், சென்ற ஜனவரி 26-ந்தேதியன்று, 'சுதந்தர ஜனநாயக இந்தியக் குடியரசு' உதயமாகியிருக்கின்றது.

சென்ற இரண்டாயிரம் ஆண்டுகளாக மன்னர்களின் ஆட்சியில் இருந்துவந்த நம் நாடு, இன்றுதான் மக்களின் ஆட்சிக்கு வந்திருக்கிறது. இனி மக்களே இந்த நாட்டு மன்னர்கள். அவர்களுக்கு இந்த நாட்டின் அரசியல் அமைப்பை ஆக்கவும் அழிக்கவும் சக்தியிருக்கிறது; மாற்றவும் திருத்தவும் உரிமையிருக்கிறது.

இன்று உருவாக்கப்பெற்றுள்ள அரசியல் அமைப்பு, உண்மையில் இந்நாட்டு மக்களில் நூற்றுக்குப் பதினலு பேர்களின் ஆதரவைத்தான் பெற்றிருக்கிறது. அதுவும், நாட்டுப் பொது மக்களால் நேர்முகமாகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற பிரதிநிதிகளின் ஆதரவைப் பெற்றிருக்கவில்லை. காமராஜர் போன்ற காங்கிரஸ் தலைவர்கள் தங்களிஷ்டம்போல் தேர்ந்தெடுத்து அனுப்பிய, அரசியல் அறிவும் பார்லிமெண்டரி முறையும் தெரியாத பல அறிமுகமில்லாத ஆசாமிகளின் ஆதரவையே இந்த அரசியல் அமைப்பு பெற்றிருக்கிறது. எனவே இது உண்மையான ஜனநாயக முறையில் உருவான அரசியல் என்று உறுதியாகக் கூறமுடியாது. இந்த அரசியல் அமைப்பு காலத்துக்கு ஏற்றவாறு உருவாக்கப் பெற்றிருக்கிறது. இது உருவான காலத்தில் நாட்டிலே இருந்த சூழ்நிலைக்கு ஏற்றவாறு மாகாணங்களின் அதிகாரங்களெல்லாம் பறிக்கப்பட்டு மத்திய சர்க்காரின் கையிலே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

மேற்கு வங்க மாகாணம், மத்திய சர்க்காரின் விருப்பத்துக்கு விரோதமாக மறுதேர்தலில் சரத் சந்திரபோஸுக்கு வெற்றியைத் தேடிக் கொடுத்து, சர்தார் பட்டேலுடையவும் பண்டித நேருவுடையவும் புத்தி மதிகளைப் புறக்கணித்த காலத்திலேதான் இந்திய அரசியல் சட்டம் உருவாகிக்கொண்டிருந்தது. மாகாணங்கள் மத்திய சர்க்காரை எதிர்த்துப் புரட்சிக்கொடியை உயர்த்துகின்ற காலத்தில் உருவான இந்திய அரசியல் அமைப்பிலே மாகாணங் களின் உரிமைகள் ஒரேயடியாகப் பறிக்கப்பட்டிருப்பது அதிசயமல்ல. வங்க மாகாணம் மட்டுமின்றி, சென்னை, அஸ்ஸாம் போன்ற இன்னும் பல மாகாணங்கள் எதிர்காலத் தில் தங்களிஷ்டம்போல் நடந்துகொள்ளக் கூடும் என்ற சந்தேகம் சர்தாருக்கு இருந்திருக்குமாயின், அதுவும்ஆச்சரியப் படத்தக்கதல்ல. எனவே மாகாணங்கள் வெறும் பஞ்சாயத்து போர்டுகளைப்போல் மிகச் சில அதிகாரங்களே அளிக்கப் பெற்றிருப்பது சூழ் நிலையின் விளைவு என்று கூறலாம். சூழ் நிலைக்கு ஏற்றவாறு உருவாக்கப் பெற்றுள்ள இந்த அரசியல் அமைப்பு, இனி எந்தக் காலத்துக்கும் ஏற்றதாயிருக்கு மென்று நாம் நம்புவதற்கில்லை. மாகாணங்களுக்குப் பெரும் பான்மையான அதிகாரங்கள் வழங்கப்பெற்ற ஒரு 'பெடரல்' சர்க்காரே இந்தியத் துணைக்கண்டத்துக்கு ஏற்றது என்பதை இந்த நாட்டு மக்கள் விரைவில் உணரப் போவது உறுதி. அப்போது இந்த அரசியல் அடியோடு மாற்றியமைக்கப்பட வேண்டியிருக்குமென்பதும் திண்ணம். அவ்விதம் மாற்றி யமைக்கப்படவேண்டுமாயின் அதற்கு இந்த நாட்டிலுள்ள மூன்றில் இரண்டு பங்கு மக்களின் ஆதரவு வேண்டும்,

இந்த அரசியல் அமைப்பு இந்நாட்டுக்கு ஏற்றதா, இல்லை யாவென்று தீர்ப்புக் கூறும் பொறுப்பு இந்த நாட்டு மக்களு டையது. ஆனால் அவர்கள் இன்றைய தினம் எந்தவிதமான தீர்ப்புக் கூறவும் தகுதியான நிலையில் இல்லை. ஆட்சியில் இருக்கின்ற காங்கிரஸ் கட்சிக்கு மாற்றுக் கட்சியொன்று இந்த நாட்டிலே முளைக்கின்ற வரையில், இதை 'ஜன நாயக ஆட்சி' என்று அழைப்பதும் 'குடியரசு' என்று கூறுவதும் கேலிக் கூத்தாகவேயிருக்கும். எனவே, இந்த நாட்டில் உண்மையாகவே மக்களின் ஆட்சி மலரவேண்டுமாயின், காங்கிரஸுக்கு எதிராக மாற்றுக் கட்சியொன்று தோற்று விக்கப்படவேண்டும்.

காங்கிரஸுக்கு எதிராக எத்தனையோ கட்சிகள் இருக் கின்றன. ஆனால் அவைகளில் ஒன்றுகூட அகில இந்தியாவி லும் செல்வாக்குப் பெற்றதாக இல்லை. எனவே உண்மை யான ஜன நாயகம் இங்கே உதயமாகவேண்டுமாயின், மகத் தான சக்தி வாய்ந்த மாற்றுக் கட்சியொன்று தோற்றுவிக்கப் படவேண்டும்.

'காங்கிரஸைப்போல் வேறு எந்தக் கட்சியும் இந்த நாட் டிலே பொது மக்களின் நம்பிக்கையைப் பெற்றிருக்கவில்லை' என்று சர்தார் பட்டேல் அவர்கள் அடிக்கடி கூறுகின்றார். காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த சர்தார் அவர்கள் தமது கட்சி யின் மீதுள்ள விசுவாசத்தை இந்த முறையில் பிரகடனப் படுத்துவது அவருடைய கடமையாக இருக்கலாம். ஆனால் அவர் அவ்விதம் கூறுவது இந்த நாட்டின் எதிர்கால நன் மைக்கு ஏற்றதல்ல. இந்த நாட்டிலே மக்களின் நம்பிக்கை யைப் பெற்ற ஒரேயொரு கட்சிதான் இருக்கிறதென்றால், இங்கே இருப்பது ஜனநாயகமல்ல; குடியரசுமல்ல. அசல் சர்வாதிகாரமேயாகும். இத்தாலியிலே பாசிஸ்டு கட்சி ஒன்று தான் இருந்தது. ஜெர்மானியிலும் நாஜி என்னும் ஒரே யொரு கட்சிதான் இருந்தது. இத்தாலியின் வழியிலும் ஜெர்மானியின் பாதையிலும் நம் நாடு செல்லக்கூடாது என்று சர்தார் விரும்புவாராயின், ஜனநாயக ரீதியிலே உரு வாக்கப்படுகின்ற மாற்றுக் கட்சியொன்றை அவர் வரவேற்க வேண்டும்.

இன்றைய நிலையில் மக்களின் ஆதரவைப் பெற்ற மாபெருந் தலைவர்கள் யாரும் காங்கிரஸுக்கு வெளியிலே இல்லை. எனவே பண்டித நேரு போன்ற பொதுமக்களின் நம்பிக்கையைப் பெற்றவர்கள் காங்கிரஸை விட்டு உடனே வெளியேறவேண்டும். அடுத்த பொதுத் தேர்தலுக்குள் காங்கிரஸை முறியடிக்கத்தகுந்த மகத்தான மாற்றுக் கட்சி யொன்றை அவர் உருவாக்கிக் கொள்ளவேண்டும். அப்போது தான் இந்த நாட்டிலே உண்மையான ஜனநாயகம் உதய மாகும்; மக்களின் ஆட்சியும் மலரும்.

ஜனநாயகத்தை அடிப்படையாகக் கொண்ட அரசியல் நடைபெறுகின்ற இந்த நாட்டிலே எந்தக் கட்சியினர் ஆட்சி பீடத்தில் அமர்ந்தாலும் சரி, அவர்கள் இந்த நாட்டிலுள்ள முஸ்லிம்கள் முதலிய மைனாரிட்டி சமூக மக்களின் கருத்து என்னவென்று அறிந்து நேர்மையாக நடந்துகொள்ளவேண் டும். புதிய அரசியல் சட்டத்தில் முஸ்லிம்களுக்குத் தனித் தொகுதித் தேர்தல் முறை இடம்பெறவில்லையாகையால் முஸ்

லிம்களின் சரியான பிரதிநிதிகள் சட்ட சபைகளுக்கு, அல்லது பார்லிமெண்டுக்கு வருவார்கள் என்று நிச்சயமாகக் கூறமுடியாது. எனவே முஸ்லிம்களைப்பற்றிய சட்ட சம்பந்தமான பிரச்னைகள் வரும்போது, முஸ்லிம்களின்விருப்பம் என்னவென்பதை முறையாக அறிந்து அவர்களுக்கு நீதி வழங்கவேண்டும். மகாத்மா காந்தியவர்கள் இடைவிடாமல் கூறிவந்ததுபோல் சிறுபான்மை சமூகத்தினருக்கு நீதி வழங்காத அரசாங்கம் நீடித்து நடக்கமுடியாது என்பதை ஆட்சி பீடத்தில் ஏறுகின்றவர்கள் அறிந்து கொள்ளவேண்டும்.

## வாழ்க, ஜனாதிபதி!

**நம்** இந்தியக் குடிஅரசின் முதல் ஜனாதிபதியாக வந்துள்ள டாக்டர் ராஜேந்திர பிரசாத் அவர்களுக்கு நல்வரவு கூறி வாழ்த்துக் கூறுகின்றோம்.

டாக்டர் ராஜேந்திரப் பிரசாத் அவர்கள் இந்த நாட்டுக்குச் செய்துள்ள நீண்ட காலத் தொண்டின் பெருமைக்கு அறிகுறியாகவே இந்தியக் குடியரசின் முதல் ஜனாதிபதியின் பதவி அவருக்குக் கிடைத்துள்ளது.

இந்திய சுதந்தரப் போராட்டத்திலே பல தியாகங்களை இவர் செய்திருக்கின்றார். நாட்டுப்பொது மக்களின் நம்பிக்கைக்கும் அன்புக்கும் பாத்திரமான தேசத் தலைவர்களுக்குள்ளே இவரும் ஒருவராக இருந்திருக்கின்றார். காந்தி மகாத்மாவின் வழியில் நம்பிக்கையும் விசுவாசமுமுள்ள இவரது தலைமையில் நாட்டிலே அன்பும் இன்பமும் அமைதியும் நிலவுமென்று நம்புகிறோம்.

டாக்டர் ராஜேந்திரப் பிரசாத் அவர்கள் இந்தியப் பார்லிமெண்டில் நிகழ்த்தியுள்ள முதல் பிரசங்கத்திலே, இராணுவத்துக்காக இந்த நாட்டிலே செய்யப்படுகின்ற மித மிஞ்சிய செலவு, மிக விரைவில் குறைக்கப்படுமென்று கூறியுள்ளார். இது நாட்டு மக்களுக்கு நம்பிக்கையை ஊட்டுவதாக இருக்கின்றது. பொருளாதாரத் துறையிலே இந்தியாவையும் பாக்கிஸ்தானையும் முன்னேற விடாமல் தடுத்துக் கொண்டிருப்பது, இவ்விரு நாடுகளின் மித மிஞ்சிய இராணுவச் செலவுகள் என்பதை யாரும் மறுக்கமுடியாது. நம் தலைவர்களுக்கெல்லாம் இந்த உண்மை மிக நன்றாகத் தெரிந்திருந்தும், இவ்விரு நாடுகளுக்கிடையே இருந்து வருகின்ற பரஸ்பர அவநம்பிக்கையின் காரணமாக இராணுவச் செலவுகள் நாளுக்கு நாள் அதிகரித்த வண்ணமாகவே இருந்து வருகின்றது. பரஸ்பர அவநம்பிக்கையும் அச்சமும் நீங்கி, இராணுவச் செலவுகள் குறைக்கப்பட்டாலன்றி, இந்தியத் துணைக்கண்டத்தின் எதிர்காலம் இருள் சூழ்ந்ததாகவேஇருக்குமென்ற உண்மையை இப்போதுதான் இவ்விரு நாடுகளும் உணர்ந்து வருவதாகத் தெரிகிறது. எனவேதான் டாக்டர் ராஜேந்திரப் பிரசாத் இராணுவச் செலவைக் குறைத்துக்கொள்ளப் போவதாகக் கூறுகின்றார் என்று நம்புகிறோம்.

கல்வி வளர்ச்சிக்கும் சுகாதார வசதிகளுக்கும் பணமில்லை. உணவுப் பொருள்களை உற்பத்திச் செய்யவும் தொழில் வளர்ச்சிக்குத் துணைசெய்யவும் பணமில்லை. இந்த நிலையில் நாட்டுப் பொது மக்களின் வறுமைத் துன்பம் வளர்ந்துகொண்டேயிருக்கிறது. விவசாயிகளின் வாழ்க்கை வரண்ட பாலைவனமாக மாறிக்கொண்டிருக்கிறது. தொழிலாளிகளின் துயரம் பெருகிக்கொண்டேயிருக்கிறது. நாடு விடுதலை பெற்றபிறகும் நம்பிக்கை நட்சத்திரத்தைக் காணமுடியாத அவர்கள், வேறு வழியின்றிக் கம்யூனிஸத்தைக் கட்டித் தழுவக் காத்துக்கொண்டிருக்கின்றனர்.

இந்த உண்மையை இந்தியாவிலும் பாக்கிஸ்தானிலும் இருக்கின்ற ஆளவந்தார்கள் அறிந்துதான் இருக்கிறார்கள். எனினும் இராணுவச் செலவுகளிற் பெரும் பகுதியை விழுங்கி வருகின்ற கஷ்மீர் தகராறைத் தீர்த்துக்கொள்ள முடியவில்லை. இரு நாடுகளின் வருவாயையும் குறைத்து வருகின்ற பொருளாதாரப் போரையும் நிறுத்திக் கொள்ள முடியவில்லை.

இத்தகைய சோதனைகள் நிறைந்த சூழ்நிலையில் பொறுப்புள்ள பதவியை ஏற்றுக் கொண்டுள்ள டாக்டர் ராஜேந்திரப் பிரசாத் அவர்கள், நாடு விமோசனமடைய நல்ல வழி காட்டுவாராக!





## திராவிட முன்னேற்றக் கழகம்

சென்ற மாதம் சென்னையில் நடைபெற்ற திராவிட முன்னேற்றக் கழக மாநாட்டிலே 15 ஆயிரத்துக்கு அதிகமாகவே ஆண்களும் பெண்களுமாகக் குழுமியிருந்தனர். எனினும், அத்துணைப் பெரிய மாநாட்டைப் பற்றி இந்த நாட்டிலுள்ள தினசரிப் பத்திரிகைகள் பல, கட்டுப்பாடாக இருட்டடிப்புச் செய்துவிட்டன. இதனால் அந்த மாநாட்டின் முக்கியத்தைக் குறைத்து மதிப்பிட முடியாது. திராவிட முன்னேற்றக் கழகத்தின் குறிக்கோளாகிய திராவிடநாடு பிரிவினை எப்போது, எந்த அளவுக்கு வெற்றி பெறுமென்று நிச்சயமாகச் சொல்ல முடியாதாயினும், இந்தியாவின் புதிய அரசியல் சட்டம் தென்னிந்திய மக்களால் தீவிரமாக எதிர்க்கப்படுகிறது என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். திராவிட முன்னேற்றக் கழகத்தில் பொதுச் செயலாளராகிய அறிஞர் அண்ணாதுரையவர்கள் இந்தியாவின் புதிய அரசியல் சட்டத்தை 'விரும்பத்தகாதது' 'ஜனநாயகத் தன்மையற்றது' என்று வருணித்தார். இத்தகைய சட்டம் நாட்டிலே நாலாறு மாதங்களுக்குமுன் விவாதிக்கப்பட்டு வந்தபோது அண்ணாதுரையவர்கள் இந்தக் கருத்தை வெளியிட்டு நாடெங்கும் சண்டமாருதப் பிரசங்கம் செய்திருந்தால் நாட்டிலே நல்ல விழிப்புணர்ச்சி ஏற்பட்டிருக்கும். டில்லி வட்டாரத்துக்கும் அது ஒரு எச்சரிக்கையாக இருந்திருக்கும்.

தென்னிந்தியவர்கள் விரும்பாத ஜனநாயகத் தன்மையற்ற இந்த அரசியலை உருவாக்கியவர்கள் தென்னிந்தியாவைச் சேர்ந்த சட்ட நிபுணர்களே என்ற உண்மையை ஒருவரும் மறுக்க முடியாது. பதினாயிரக் கணக்கான தென்னிந்திய மக்கள் கூடியுள்ள மாநாடுகளில் வன்மையாகக் கண்டிக்கப்படுகின்ற 'விரும்பத்தகாத' அரசியல் அமைபபை, தென்னிந்தியப் பிரதிநிதிகளே உருவாக்கினார்கள் என்பது ஒரு விசித்திரமாகவே இருக்கிறது.

சரியான காலத்தில் தங்களின் கருத்தைத் தெரிவித்துக் கண்டன அம்புகளை வீசத் தவறிவிட்டார்கள் தென்னிந்தியப் பொது மக்கள். எதிர்காலத்தில் இந்த நாட்டிலே ஒரு சிறந்த அரசியல் தலைவராக விளங்கத் தகுந்த அறிவும் ஆற்றலும் படைத்த அண்ணாதுரையவர்கள், தமது கடமையில் தவறிய குற்றத்தைப் பகிரங்கமாக ஒப்புக்கொள்ளுவார் என்று நம்புகிறோம். சென்ற பல ஆண்டுகளாக சமூக சீர்திருத்தம், மத ஒழிப்புப் பிரசாரம் முதலிய சில்லரை விஷயங்களில் மட்டுமே கவனம் செலுத்திப் பெரிய விஷயங்களைப் புறக்கணித்து வந்த பெரியாருக்கு அறிஞர் அண்ணாதுரை ஓய்வு கொடுத்துவிட்டார். இனி அண்ணாதுரையவர்களின் தலைமையின் கீழ் திரண்டுள்ள தி. மு. கழகமாவது சில்லரை விஷயங்களை மறந்து, பெரிய விஷயங்களில் பொது நோக்குடன் செயலாற்றுமென்று நம்புகிறோம்.

அண்ணாதுரையவர்களின் அறிவு நிறைந்த சொற்பொழிவைக் கேட்க ஆயிரமாயிரம் இளைஞர்கள் கூடுகிறார்கள். அவரது எழுத்தைப் படிக்க எண்ணிறந்த மக்கள் விரும்புகிறார்கள். ஆனால் அவர்களிற் பெரும்பாலான மக்கள் அண்ணாதுரையின் 'ஆரிய மாயை'ப்பற்றி அறிந்துள்ள அளவுக்கு அரசியலைப்பற்றி அறியமாட்டார்கள். அல்லது அவருடைய 'கம்ப ரச'த்தைப்பற்றிக் கேட்டுள்ள அளவுக்குப் புதிய அரசியல் அமைப்பிலுள்ள பாதகங்களைப்பற்றித் தெரிந்திருக்கமாட்டார்கள்.

காலம் மாறிக்கொண்டிருக்கிறது என்பதையும், மக்களின் மனப்பான்மை மாறிக்கொண்டிருக்கிறதென்பதையும் அறிஞர் மிக நன்றாக அறிவார். தென்னிந்தியப் பெருங்குடி மக்களாகிய திராவிடர்கள் அரசியல் துறையில் கவனம் செலுத்த வேண்டிய காலம் வந்துவிட்டது. அவர்கள் ஆரியமாயையைப்பற்றிப் படிக்க வேண்டிய காலம்மலையேறிவிட்டது. அரசியலைப்பற்றி அவர்கள் சிந்திக்கவேண்டிய காலம் வந்துவிட்டது என்பதை நாம் மறந்துவிடலாகாது.

## உதிரிகள் 'மாநாடு'

முஸ்லிம் லீகிலிருந்து விலகிச் சென்ற ஜனப் அப்துல் ஹமீத்கான் அவர்கள் சென்ற மாதம் சென்னையில் ஒரு நாள் கூட்டிய முஸ்லிம் 'கன்வென்ஷன்' (கூட்டம்) எந்த நோக்கத்துடன் கூட்டப் பெற்றதோ அந்த நோக்கம் நிறைவேறவில்லை. தென்னிந்திய முஸ்லிம்களின் பெயரால் கூட்டப் பெற்ற அந்த மாநாடு மிக முக்கியமான பிரச்னைகளைப்பற்றி விவாதித்து முடிவுசெய்யவே கூடியதாயினும், அதில் தென்னிந்திய முஸ்லிம்

களில் வெகு சிலரே கலந்து கொண்டனர். அதுவும் சென்னை மாகாண முஸ்லிம்களின் நம்பிக்கையை ஓரளவுக்கு அதிகமாகப் பெற்ற முஸ்லிம் லீகைச் சேர்ந்த சட்ட சபை உறுப்பினர்கள் கலந்து கொள்ளவில்லை. அதில் கலந்து கொண்டு பேசியவர்களின் பெயர்களைப் பார்த்தால் சட்ட சபையிலும் வெளியிலும் இருக்கின்ற ஒரு சில 'உதிரிகள்' மட்டுமே அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டார்கள் என்பது தெளிவாகத் தெரியும். இதிலிருந்து, முஸ்லிம் லீகுக்கு எதிர் தரப்பில் இருக்கின்ற உதிரிகள் கூட்டிய மாநாடே அது என்பதில் ஐயமில்லை. இந்த மாதிரி உதிரிகளின் மாநாடு ஒன்று சென்னையில் இதற்குமுன் நடந்திருக்கிறது. அது காங்கிரஸ் பற்றுள்ள முஸ்லிம் பிரமுகர்களால் கூட்டப்பட்டது. யாராவது ஒரு காங்கிரஸ் முஸ்லிமுக்குச் சென்னை மந்திரி சபையில் இடம் கிடைக்காதாவென்று ஏங்கித் தவிக்கின்ற ஒரு சில 'தேசிய' முஸ்லிம்களால் கூட்டப்பெற்ற அந்த மாநாடு, எந்த விதமான பொது நோக்கமும் பெற்றில்லாமையால், ஒரு மந்திரிப் பதவியை வாங்கித் தரவும் அதற்கு வகையில்லாமற் போய்விட்டது. சென்ற மாதம் சென்னையில் கூட்டப்பெற்ற உதிரிகளின் மாநாட்டிலே கலந்து கொண்ட முஸ்லிம் பிரமுகர்கள் அனைவரும் சுயநலவாதிகள் அல்லவாயினும், அவர்கள் எந்த நோக்கத்துடன் மாநாட்டைக் கூட்டினார்களோ அந்த நோக்கம் நிறைவேறுமற் போய்விட்டது. சென்னை மாகாணத்திலே பெரும்பான்மை முஸ்லிம்களின் ஆதரவைப் பெற்றுள்ள முஸ்லிம் லீக் சட்டசபை உறுப்பினர்கள் கலந்து கொள்ளாத அந்த மாநாட்டுக்குத் தென்னிந்திய முஸ்லிம்களின் வருங்கால அரசியல் வாழ்வைப் பற்றித் தீர்ப்புக்கூற என்ன உரிமைஇருக்கிறதென்று நமக்குத் தெரியவில்லை. சட்ட சபை உறுப்பினர்களுக்குள்ளே கருத்து வேற்றுமைகள் எத்தனையோ இருக்கலாம். அவர்கள் ஆளுக்கு ஒரு கட்சியாகத் திகழலாம். ஆனால் அவர்களின் சுயநல எண்ணங்களின் மீது எழுகின்ற பூசல்களுக்கும் பொது மக்களுக்கும் என்ன சம்பந்தமிருக்கிறது? எனவே, முஸ்லிம் பொது மக்களின் சரியான சட்ட பூர்வமான பிரதிநிதிகளாகிய முஸ்லிம் லீக் சட்டசபை உறுப்பினர்களும் கலந்துகொள்ளுகின்ற மாநாட்டைத்தான் 'முஸ்லிம் மாநாடு' என்று அழைப்பது பொருந்தும். இந்த உதிரிகளின் மாநாடு இறுதியில் செய்துள்ள தீர்மானத்தின்படி தென்னிந்திய முஸ்லிம்களின் உண்மையான பிரதிநிதித்துவம் பெற்ற மாநாடு ஒன்று விரைவில் கூட்டப்படுமென்று நம்புகிறோம். அந்த மாநாட்டிலே போட்டி மனப்பான்மையும் பதவி மோகமும் குறுகிய புத்தியும் குறுக்கிடக் கூடாதென்று கூறுகின்றோம்.



<u>அட்டைப்படம்</u>

# அறிவுக்கும் திறமைக்கும் அபாயம்!

இன்று இந்தியாவிலே அறிவுக்கும் திறமைக்கும் அபாயம் ஏற்பட்டிருக்கிறது. அன்புக்கும் பண்புக்கும் பகைமை தோன்றியிருக்கிறது.

உலகத்திலேயே மிகச் சிறந்த இராஜ தந்திரிகளுக்குள்ளே ஒருவராகத் திகழ்கின்றார் ராஜாஜி. அவருடைய அறிவையும் ஆற்றல்களையும் போற்றிப் புகழ்கின்ற அந்நிய நாட்டு அரசியல் அறிஞர்கள் பலர். அறிவும் திறமையுமட்டுமின்றி, நெஞ்சிலே உறுதியும் நேர்மைத்திறனும் படைத்தவர் ராஜாஜி. 5 ஆண்டுகளுக்குப் பின்னே இந்த நாட்டிலே என்ன நடைபெறப்போகிறதென்ற உண்மையை உணரும் ஆற்றல் அவருக்கு 1942-ல் இருந்தது. அந்த உண்மையை வெளியிலே சொன்னால் அவருக்கு எத்துணைப் பெரிய எதிர்ப்பும் பகைமையும் தோன்றுமென்பதை அவர் அறிந்துதான் இருந்தார். எனினும் அதற்காக அவர் தமது கருத்தைத் தெளிவாக வெளியிடத் தயங்கினாரில்லை; தலைமைப் பதவி போய்விடுமே என்று ஏங்கினாரில்லை; காங்கிரஸ்காரர்களின் கோபம் பொங்கி எழுமே என்று பின்வாங்கினாரில்லை; அன்பர்களின் ஆதரவு அற்றுப்போகுமே என்று அஞ்சினாரில்லை; நண்பர்களின் நட்புரிமை நலிந்துபோகுமே என்று நடுங்கினாரில்லை. 'எது வந்தாலும் சரி உண்மையை ஒளிக்காமல் கூறுவோம்' என்று உறுதியாக நின்று, நாட்டுப் பிரிவினையை ஏற்றுக்கொண்டாலொழிய நாடு விடுதலைப்பெற வேறு வழியில்லை என்று உறுதியாகக் கூறினார். அதன் காரணமாக அவருக்கு விளைந்த துன்பங்களைப் புன்முறுவலுடன் பொறுத்துக்கொண்டார்.

இது ராஜாஜியவர்களின் நாணயத்துக்கும் நேர்மைக்கும் நெஞ்சுறுதிக்கும் நிகரற்ற உதாரணம்.

இறுதியில் இந்த நாட்டிலே என்ன நடந்தது? அவர் எதிர்பார்த்துதான் நடந்தது. எது தவிர்க்கமுடியாதது என்று 1942-ல் அவர் கூறினாரோ அதுதான் 1947-ல் நிகழ்ந்துவிட்டது. எனவே ராஜாஜியவர்களின் முன்னோக்கும் நுண்ணறிவும் நிகரற்றது என்பதை அவருடைய பகைவரும் ஏற்றுக்கொள்ளுவர்.

அத்தகைய நிண்ணறிவு படைத்த ராஜாஜியவர்கள் நம் சுதந்தர இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரலாக விளங்கியது நமது நல்ல காலத்தின் அறிகுறி என்று நம்பியிருந்தோம். இந்த நாடு ஒரு குடி அரசாக மலரும்போதும், அவரே அதன் முதல் ஜனாதிபதியாக மிளிருவார் என்று இத்நாட்டு மக்கள் நம்பியிருந்தனர். ஆனால் அவர்களின் நம்பிக்கை சுக்கு நூறாக நொறுங்கிப் போய்விட்டது. விரல் விட்டு எண்ணிவிடக்கூடிய ஒரு சில காங்கிரஸ்காரர்களின் கபட நாடகத்தால் அவர் தமது வீட்டுக்கு ஓய்வு எடுத்துங்கொள்ளுமாறு அனுப்பப்பட்டிருக்கின்றார். இது மக்களுக்கு மனவேதனையைத் தந்திருக்கிறது. நாட்டு மக்களின் கருத்துக்கும் நாடாள வந்தவர்களின் போக்குக்கும் என்ன சம்பந்தமிருக்கிறது என்று அவர்கள் கேட்கின்றார்கள்.

ராஜாஜியை விரும்பாத நாடாளவந்த காங்கிரஸ் பார்லிமெண்டு உறுப்பினர்களாகிய வடநாட்டவர் என்ன கூறுகின்றனர்?

அவர் பாக்கிஸ்தான் கிளர்ச்சியை ஆதரித்தார். பண்டித நேருவுக்கு டில்லியிலே இருந்துகொண்டு துர்ப்புத்தி சொல்லிவத்தார். ஹிந்தியை எதிர்த்தார்.

இத்தகைய காரணங்களுக்காகவே ராஜாஜியை அவர்கள் விரும்பவில்லையாம். இவை தவிர, பகிரங்கமாக அவர்கள் கூறமுடியாத ஒரு உண்மையும் இருக்கிறது. அதுதான் வடநாடு, தென்னாடு என்ற வேற்றுமையுணர்ச்சியின் விளைவாகத் தென்னிந்தியராகிய ராஜாஜியை அவர்கள் விரும்பவில்லை என்பது.

பாக்கிஸ்தான் கிளர்ச்சியை ராஜாஜீ ஆதரித்தார் என்பது உண்மை. ஆனால் அதை 5 வருடங்களுக்குப் பின்பு மற்றவர்களும் ஏன் ஒப்புக்கொண்டார்கள் என்று வடநாட்டவர்களை நாம் கேட்கக் கடமைப்பட்டிருக்கின்றோம்.

இரண்டாவதாக, ராஜாஜீ டில்லியிலே இருந்துகொண்டு பண்டித நேருவுக்குக் கெட்டபுத்தி கூறிவந்தார் என்று சொல்லப்படுகிறது. ராஜாஜீயின் ஆலோசனைகளுக்குப் பண்டிதர் செவிசாய்த்து வந்தார் என்பது உண்மையாயின், அதனால் இந்த நாட்டுக்கு விளைந்த தீமைகள் என்னவென்று தெரியவேண்டுமல்லவா?

மூன்றாவதாக, ராஜாஜீ ஹிந்தியை எதிர்த்தார் என்று சொல்லப்படுகிறது. அதே ஹிந்தியை பண்டித நேரு அவர்கள் எதிர்க்கவில்லையா? என்ன என்ன காரணங்களுக்காகப் பண்டிதர் ஹிந்தியை எதிர்த்தாரோ அதே காரணங்களுக்காகத்தான் ராஜாஜியும் எதிர்த்தார். ஆனால் பண்டித நேருவை வட இந்தியர்கள் புறக்கணிக்கவில்லை. ராஜாஜியைப் புறக்கணித்துவிட்டார்கள்.

இவையெல்லாம் பார்க்கும்போது, வடநாடு, தென்னாடு என்ற வேற்றுமையுணர்ச்சியின் விளைவாகவே ராஜாஜி ஜனாதிபதியாகாதபடி தடுக்கப்பட்டிருக்கின்றார் என்பது தெளிவாகத் தெரியும்'

''வடநாடு, தென்னாடு என்ற பூசலைக் கிளப்பாதே!'' என்று நமக்கு அடிக்கடி கூறுகின்ற தென்னாட்டுத் தேசபக்தர்கள் இதற்கு என்ன சமாதானம் கூறப்போகிறார்கள்? வடநாடு, தென்னாடு என்ற வேற்றுமையை வளர்க்கின்றவர்கள் தேசத்துரோகிகள் என்று ஒருகாலத்தில் எழுதிய ஆனந்த விகடன் போன்ற தேசபக்த ஏடுகள் இப்போது என்ன சொல்லுகின்றன? 'ராஜாஜியை வேண்டாமென்று சொல்ல வேறு காரணம் இருக்கவேண்டும்' என்று மூடுமந்திரமாக எழுதி முழுப் பூசணிக்காயைச் சோற்றிலே மறைக்கப் பார்க்கிறது ஆனந்த விகடன்!

ராஜாஜியவர்கள், வீட்டுக்கு வருவதற்கு யார் காரணமாயிருந்தாலும் அதைப் பற்றி தமக்குக் கவலையில்லை. அவர் நம் மாகாணத்திலேயே நம்முடன் வாழ்வதில் நமக்கு மட்டற்ற மகிழ்ச்சியுண்டு. ஆனால் நாட்டு நன்மையைப் பெரிதாகக் கருதுகின்ற ஒவ்வொருவரும் அவர் வீட்டுக்கு வந்துவிட்டது குறித்து வருந்தாமலிருக்க முடியாது. நாட்டு நன்மையில் நாட்டமுள்ள நமது பண்டித நேரு அவர்கள் ராஜாஜியை டில்லியிலே வழியனுப்பியபோது அவர் ஆற்றிய சொற்பொழிவில், அவருடைய இதயக் குமுறலின் அலையோசையைக் கேட்டோம். பிரிவாற்றாமையால் அவர் கூறிய அன்பு மொழிகளில் ஆத்திரமும் ஆயாசமும் கலந்து கண்ணீர் மல்கிய காட்சியைக் கண்டோம்.

நேரு அவர்கள் தமது அருமைத் தந்தையை இழந்தபோதும், ஆருயிர் மனைவியைத் துறந்தபோதும், இத்துணைப் பெரிய மனவேதனைக்கு ஆளாகியிருப்பார் என்று நாம் நினைக்கவில்லை. ஆனால் ராஜாஜியின் தற்காலிகப் பிரிவு மட்டும் அத்துணை ஆருத்துயரை அளித்தது ஏன்? பண்டித நேருவுக்கு அந்தக் காலத்தில் ஆலோசனைகள் கூறிவந்தவர் அவருடைய தந்தை மோதிலால் நேரு. அவருக்குப்பின் காந்தி மகாத்மா. காந்தி மகாத்மாவும் மறைந்தபிறகு ராஜாஜி. தந்தையும் காந்தி மகாத்மாவும் உயிர்வாழ்ந்த காலத்தில் பண்டிதரின் பொறுப்பும் கடமையும் மிகக் குறைவாகவே இருந்தன. ஆனால் இப்போது அவைகள் ஆயிரம் பங்கு அதிகமாகிவிட்டன. இந்த நிலையில் அவருக்கு ராஜாஜீயே சிறந்த ஆலோசனைகளைக்கூறிவந்தார். எனவேதான், ராஜாஜியின் பிரிவுபசாரத்தின் போது அவர் ஆற்றிய சொற்பொழிவில் சோகமும் சஞ்சலமும் கண்ணீரும் பெருகினவென்று நினைக்கவேண்டியிருக்கிறது.

பண்டித நேருவைப்போலவே இந்த நாட்டிலுள்ள முஸ்லிம்களும் மற்ற சிறுபான்மை சமூக மக்களும் வருந்துகிறார்கள் என்பதில் ஐயமில்லை. முஸ்லிம்கள் முதலிய மைனாரிட்டி சமூக மக்களுக்கு ராஜாஜியின்மீதுள்ள அன்பும் நம்பிக்கையும் அளவிறந்தது என்பதற்கு அறிகுறியாகவே இந்த இதழின் அட்டை அவரது திருவுருவப் படத்தைத் தாங்கி வருகின்றது.

***முஸ்லிம் லீகுக்கு இனி இந்தியாவில் வேலையில்லை என்று சிலர் கூறுகின்றனர். ஆனால் இப்போதுதான் அதிக வேலைகள் இருப்பதாகக் கூறுகிறார் இக் கட்டுரையாளர்! ஏன், எப்படி என்று கவனியுங்கள்!***

# எந்தக் கட்சியில் சேருவது?



'இந்திய முஸ்லிம்கள் இனி எந்தக் கட்சியில் சேருவது?' என்ற கேள்வி இந்தியாவெங்கும் இப்போது கேட்கப்பட்டு வருகின்றது. முஸ்லிம்களும் முஸ்லிம் அல்லாதார்களும் இந்தக் கேள்வியை அடிக்கடி கேட்டுக் கொண்டிருக்கின்றனர்.

இந்தக் கேள்வி பிறக்க என்ன காரணம்?

முஸ்லிம்களுக்குச் சென்ற ஆண்டு வரையில் இருந்து வந்த அரசியல் அந்தஸ்து இப்போது மறைந்துவிட்டது. சென்ற காலத்தில் சட்டசபைகளுக்கு முஸ்லிம் பிரதிநிதிகளாகச் சென்றவர்கள் முஸ்லிம்களாலேயே தேர்ந்தெடுக்கப் பெற்று வந்தார்கள். அந்த நிலை இப்போது முற்றிலும் மாறிவிட்டது. முஸ்லிம்களை முஸ்லிம்களே தேர்ந்தெடுப்பது என்ற தனித் தொகுதித் தேர்தல் முறை, சுதந்தர இந்தியக் குடிஅரசின் அரசியல் சட்டத்தில் இடம் பெறவில்லை.

இந்த நிலையில் முஸ்லிம்களுக்காகத் தனிப்பட்டமுறையில் ஒரு அரசியல் ஸ்தாபனம் தேவையில்லை என்று முஸ்லிம் அல்லாத அரசியல் வாதிகள் பலர் கூறுகின்றனர். அவர்களின் கருத்துக்கிணங்க இந்திய முஸ்லிம்களின் ஏகப்பிரதிநிதி ஸ்தாபனமாக விளங்கிய முஸ்லிம் லீக் இனி இந்த நாட்டிலே இருக்க வேண்டிய அவசியமில்லை என்று சொல்லப்படுகிறது.

முஸ்லிம் லீகைக் கலைத்துவிட வேண்டியதுதான் என்று சில முஸ்லிம்களும் கூறுகின்றனர். இனி முஸ்லிம் லீக் தேவையில்லை என்று கருதுகின்றவர்கள் இன்னும் இரண்டு யோசனைகளைக் கூறுகின்றனர். அதாவது,

(1) முஸ்லிம்கள் இனி காங்கிரஸில் சேர்ந்து கொள்ளலாம் என்று ஒரு சாரார் கூறுகின்றனர்.

(2) மற்றுஞ்சிலர், வேறு எந்த ஒரு கட்சியிலும் ஒரு முகமாகச் சேர வேண்டியதில்லை. அவரவர் இஷ்டம் போல் வெவ்வேறு கட்சிகளில் சேர்ந்து கொள்ளலாம் என்று கூறுகின்றனர்.

இந்த இரண்டுவித கருத்தைப் பற்றியும் நாம் சிந்திக்கு முன், முஸ்லிம் லீக் போன்ற ஒரு ஸ்தாபனம் இந்த நாட்டிலே ஏன் இருக்கலாகாது என்று சிந்திக்க வேண்டும்.

## முஸ்லிம் லீக் செய்த குற்றமென்ன?

முஸ்லிம் லீக் முதலில் (1906-ல்) தோற்றுவிக்கப் பெற்றது தனித் தொகுதிக்காகவே அல்ல; பாக்கிஸ்தானுக்காகவும் அல்ல. கல்வியிலும் கலாசாரத்திலும் நாளுக்கு நாள் நசித்துப் போய்க் கொண்டிருந்த முஸ்லிம்களை முன்னேற்றப் பாதையில் அழைத்துச் செல்ல அத்தகைய தனிப்பட்ட ஸ்தாபனம் ஒன்று தேவையாயிருந்தது. கேவலம் சட்டசபையில் நுழைவதற்காகவும் மந்திரிப் பதவிகளைப் பெறுவதற்காகவும் உருவானதல்ல முஸ்லிம் லீக். முஸ்லிம்களின் கல்வி, கலாச்சார மேன்மைக்காக முதலில் தோற்றுவிக்கப் பெற்ற முஸ்லிம் லீக், நாளடைவில் அரசியலில் இந்திய முஸ்லிம்களின் ஒரே குரலை ஒலி பரப்பும் கருவியாயிற்று. பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவுக்குச் சுதந்தரம் தருவதாக முன் வந்தபோது, 10 கோடி முஸ்லிமகளின் கருத்தையும் ஒரே குரலில் ஒலி பரப்பியதால்தான், சர்தார் வல்லபாய் படேல் அவர்கள் அண்மையில் கூறியதுபோல், "அதிகமான கஷ்டங்களை அனுபவிக்காமல் சுதந்தரம் பெற்று விட்டோம்."

இந்த நாட்டிலே இப்போது வாழ்கின்ற 4 கோடி முஸ்லிம்களுக்கும் அந்த முஸ்லிம் லீகால் நன்மையோ, தீமையோ அல்லது இரண்டுமே விளையாமல் போய் விட்டாலும், இந்த நாட்டுக்கு மிக விரைவிலும் எளிதிலும் சுதந்தரம் கிடைத்ததற்கு முழு முதற் காரணம் முஸ்லிம் லீக் என்பதை ஒருவரும் மறுக்க முடியாது.

## என்ன நடந்திருக்கும்?

இந்தியாவின் சுதந்தரத்தைக் கையிலே ஏந்திக் கொண்டு இந்த நாட்டுக்கு வந்த மௌண்ட்பேட்டன் பிரபுவின் முன்னே, முஸ்லிம் லீகைப் போல் மற்றும் பல முஸ்லிம் ஸ்தாபனங்களும் சென்று, 'நாங்கள்தான் இந்திய முஸ்லிம்களின் பிரதிநிதிகள்' என்று கூறி யிருந்தால் என்னவாகியிருக்கும்? மௌண்ட்பேட்டன் பிரபு மறு கப்பலிலேயே இலண்டனுக்குத் திரும்பி யிருப்பார். காங்கிரஸ் பொறுமை யிழந்து போருக்குக் கிளம்பியிருக்கும். உள்நாட்டுப் போர் நாடெங்கும் நடந்திருக்கும். அதன் விளைவாக நமது சுதந்தரச் சூரியனையும் மேகத் திரைகள் மறைத்திருக்கும். இந்த இடைக்காலத்தில் பிரிட்டனிலே மற்றொரு பொதுத் தேர்தலும் நடந்து முடிந்திருக்கும். அதில் சர்ச்சில் துரை மீண்டும் பதவிக்கு வந்திருப்பார்.

சர்ச்சிலின் காலத்தில் இந்தியாவுக்குச் சுதந்தரம் கிடைத்திருக்குமாவென்பது சிந்தனைக்குரிய விஷயம்.

## முஸ்லிம் லீக் ஏன் வேண்டும்?

"இந்தியாவுக்கு மிக எளிதில் சுதந்தரம் கிடைத்து விட்டதால் தான் அந்த சுதந்தரத்தின்



பெருமை மக்களுக்குத் தெரியவில்லை" என்று சர்தார் படேல் கூறியதில் ஏதாவது உண்மையிருக்குமாயின், இந்தியாவுக்குச் சுலபமாகச் சுதந்தரம் கிடைத்ததற்கு முஸ்லிம் லீகும் ஒரு முக்கியக் காரணம் என்பதை மறந்து விடலாகாது. இந்திய முஸ்லிம்களின் ஏகப்பிரதிநிதி ஸ்தாபனம் முஸ்லிம் லீக் என்ற உண்மையை அதன் எதிரிகளும் ஒப்புக் கொண்டதால்தான் இந்திய சுதந்தரம் எளிதில் கிடைத்தது. எனவே முஸ்லிம் லீகும் முஸ்லிம்களின் ஒற்றுமையும் இந்த நாட்டுக்கு நன்மையைத்தான் செய்திருக்கிறது என்று துணிந்து கூறலாம். ஆனால் இந்த நாட்டுக்குச் சுதந்தரம் கிடைத்த பிறகு, முஸ்லிம் லீகும் வேண்டாம், முஸ்லிம்களின் ஒற்றுமையும் வேண்டாம் என்று கூறுவதில் அர்த்தமில்லை. முன்னைவிட இப்போதுதான் முஸ்லிம்கள் தங்களின் கல்வி வளர்ச்சியிலும் கலாசாரத்திலும், பொருளாதாரத்திலும் அதிக கவனம் செலுத்த வேண்டி யிருக்கிறது. இந்தியாவிலுள்ள ஒவ்வொரு சமூகத்தினரும் கல்வியிலும் பொருளாதாரத்திலும் சரிநிகர் சமானமாக விளங்கினால்தான் உண்மையான ஜனநாயகம் இந்த நாட்டிலே உருவாக முடியும். கல்வியிலும், பொருளாதாரத்திலும் ஏற்கனவே பின்தங்கி விட்ட இந்திய முஸ்லிம்களுக்கு இன்றைய சுதந்தர இந்தியாவில் எந்த விதமான சலிக்கைகளும் கிடையா. எனவே முஸ்லிம்கள் இனி தங்களைத் தாங்களே முன்னேற்றிக் கொள்ளும் வழிவகைகளைக் காண வேண்டி யிருக்கிறது. அதற்கு முஸ்லிம்களுக்காக முஸ்லிம் லீக் போன்ற மக்களின் மகத்தான ஆதரவையும் நம்பிக்கையையும் பெற்ற ஸ்தாபனம் ஒன்றுதேவையல்லவா? அது முஸ்லிம் லீகாகவே இருப்பதில் என்ன குற்றம்? முஸ்லிம் லீகை ஒழித்துவிட்டு, அதைப்போன்ற மற்றொரு ஸ்தாபனத்தை இப்போது நிறுவ முடியுமா என்று நாம் சிந்திக்க வேண்டும்.

சிலரது விருப்பத்துக்கிணங்க முஸ்லிம் லீகையே கலைத்து விடுவதாக வைத்துக் கொள்ளுவோம். இப்போது முஸ்லிம்கள் வேறு எந்தக் கட்சியில் சேருவது என்ற கேள்வி எழுகின்றது. காங்கிரஸில் சேரலாம் என்று சிலர் கூறுகின்றனர். காங்கிரஸுக்கு இந்த நாட்டிலே இருந்து வந்த மதிப்பு நாளுக்கு நாள் குறைந்து வருகின்றது. மக்களிடையே அதன் செல்வாக்கு மறைந்து வருகின்றது. பண மூட்டைகளின் ஆதிக்கம் அங்கே பெருகி வருகின்றது. பிற்போக்குச் சக்திகளுக்குப் புகலிடமாகவும் வகுப்புவாதிகளுக்கு உறைவிடமாகவும் அது விளங்குகின்றது. எனவே, காந்தி மகான் கருத்துப்படி இப்போது முஸ்லிம்கள் காங்கிரஸில் சேருவது விரும்பத்தக்கதல்ல.

வேறு எந்தக் கட்சியிலும் முஸ்லிம்கள் அனைவரும் ஒருமுகமாகச் சேர்ந்து கொள்வதைவிட, பல்வேறு கட்சிகளில் அவரவர்

இஷ்டம்போல் இணைந்து, இந்த நாட்டுக்குத் தொண்டு செய்வதே நலம் என்று நம்முள் பலர் நினைக்கின்றனர்.

### நம்பிக்கையுள்ள எதிர்காலம்

வருங்காலத்திலே இந்த நாட்டில் எத்தனையோ அரசியல் சமுதாயப் புரட்சிப் புயல்கள் கிளம்பப் போகின்றன. அதன் விளைவாக இங்கே அரசியலில் எத்தனையோ மாறுதல்கள் நிகழப் போகின்றன. அதில் உண்மையான ஜனநாயகம் தப்பிப் பிழைத்தால் இந்திய முஸ்லிம்களுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறதென்று துணிந்து கூறலாம்.

ஜனநாயக அரசியலில் பல்வேறு கட்சிகள் இந்த நாட்டிலே இடம் பெறுவது இயல்பு. அப்போது அதிகாரத்துக்கு வர ஆசைப்படுகின்ற கட்சிகள் நிச்சயமாக 4 கோடி முஸ்லிம்களின் அன்பையும் ஆதரவையும் புறக்கணித்து விட முடியாது. அந்த நிலையில் எந்தக் கட்சியில் தங்களுக்கு நன்மைகள் விளையும் என்று முஸ்லிம்கள் உணர்ந்து கொள்ள முடியும். அப்போது யார் விரும்பினாலும் விரும்பா விட்டாலும் முஸ்லிம்களின் ஒற்றுமை உதயமாகத்தான் போகிறது. எனவே, முஸ்லிம் லீக் ஒழிந்து போனால் முஸ்லிம்களின் ஒற்றுமையும் குறைந்து போகுமென்று எதிரிகள் யாராவது நினைத்தால், அவர்கள் நிச்சயமாக ஏமாந்தே போவார்கள்.

### லீகின் வேலைகள்

இன்றைய நிலையில இந்திய முஸ்லிம்கள் எந்த அரசியல் கட்சியிலும் சேர வேண்டியதில்லை, சட்ட சபைகளுக்கோ பார்லிமெண்டுக்கோ போக வேண்டியதில்லை. இரண்டாவது பொதுத் தேர்தல் வருகின்ற காலத்தில், அதாவது இன்னும் 6 வருடங்களுக்குப் பிறகு, எந்தக் கட்சியில் சேர்ந்தால் நமக்கு நலம் விளையும் என்று நாம் அறிந்து கொள்ள முடியும். அதுவரையிலும் அதற்குப் பிறகும் முஸ்லிம் லீக் இருக்க வேண்டியதுதான். ஆனால் அரசியலில் தலையிடக் கூடாது. தேர்தலில் நிற்கலாகாது. சுருங்கச் சொல்வதாயின் சுயநல எண்ணமே சிறிதுமில்லாத நல்ல மனிதர்களே அதில் இருத்தல் வேண்டும். முஸ்லிம்களின் கல்வி வளர்ச்சிக்காகவும் பொருளாதார மேன்மைக்காகவும் தன்னாலியன்றதையெல்லாம் முஸ்லிம் லீக் செய்தல் வேண்டும். ஒவ்வொரு காலத்தில் பல்வேறு கட்சிகள் மாறி மாறி இந்த நாட்டிலே ஆட்சிக் கடிவாளத்தைப் பிடிக்கின்றபோது, அரசியல் சட்டத்தில் மாறுதல்கள் செய்யப்படும். அப்போது முஸ்லிம்களின் சரியான கருத்து என்னவென்பதை முஸ்லிம் லீக் எடுத்துக் கூற வேண்டும். சுருங்கச் சொல்ல வேண்டுமாயின், இந்த நாட்டு முஸ்லிம்களின் சரியான பிரதிநிதி ஸ்தாபனம் முஸ்லிம் லீக் ஒன்றே என்னும் உண்மையை உறுதிப்படுத்த வேண்டும். அதன் கருத்தைப் புறக்கணிக்கின்ற கட்சிகளுக்கு முஸ்லிம்களின் ஆதரவு கிடைக்காது என்பதை உணர்த்த வேண்டும். இதுதான் இந்தியக் குடியரசில் முஸ்லிம் லீகின் எதிர்கால வேலைத் திட்டமாக இருத்தல் வேண்டும். —எஸ். ஏ. கமால்






1928-ம் ஆண்டிலே இலண்டனுக்குச் சென்ற ஜனாப் ஜின்னா அவர்கள் அதற்கடுத்த வருடமே தாய் நாட்டுக்குத் திரும்பினார். அவர் இலண்டனிலிருந்து வந்தவுடன் 1929ல் டில்லியில் கூடிய முஸ்லிம் லீக் மாநாட்டில் அவர் சமர்ப்பித்த பதினாலு கோரிக்கைகள் "ஜின்னாவின் பதினாலு கோரிக்கைகள்" என்னும் பெயருடன் நாடெங்கும் பிரபலமாக விளங்கியது.

இதற்கிடையில் ஆகாகான் அவர்களின் தலைமையில் பிரிந்து நின்ற சில முஸ்லிம் லீக் தலைவர்களையும ஸர். மஹம்மது ஷபீ அவர்களையும் ஜனாப் ஜின்னா ஒன்றுபடுத்திவிட்டார். ஒற்றுமைப் பிரியரான ஜின்னாவுக்கு முஸ்லிம் லீகிலேயே இரண்டு கட்சிகள் இருப்பது வருத்தத்தைத் தந்தது. முஸ்லிம் லீக் ஓரே குரலில் பேசினால்தான் அதன் கோரிக்கைகளையும் தீர்மானங்களையும் பிரிட்டிஷ் அரசாங்கம் மதித்து நடக்குமென்று அவர் உறுதியாக நம்பினார். முஸ்லிம் லீக் ஒன்றுதான் முஸ்லிம்களின் ஓரே பிரதிநிதி ஸ்தாபனம் என்ற உண்மை உறுதிப்படவேண்டுமாயின், முஸ்லிம் லீகிலே ஒற்றுமையும் கட்டுப்பாடும் வளர வேண்டுமென்று அவர் விரும்பினார். எனவேதான் ஆகாகான் அவர்களைத் தலைவராகக் கொண்டு தனித்து நின்ற சில பிற்போக்காளர்களையும் தமது முற்போக்குக் கட்சியில் சேர்த்துக் கொண்டார்.

பல வருடங்களாக இரண்டு பட்டிருந்திருந்த முஸ்லிம் லீக் மீண்டும் ஓரே குரலில் பேசத் தொடங்கிவிட்டது. அப்போதுதான் ஜின்னாவின் பதினாலு கோரிக்கைகளைப் பற்றிய பேச்சு நாடெங்கும்எதிரொலி செய்தது. முஸ்லிம்களெல்லாம் ஆங்காங்கே மாநாடுகள் கூட்டி, மேற்படி கோரிக்கைகளை முழுமனத்துடன் ஆதரிப்பதாகத் தீர்மானங்கள் நிறைவேற்றினர்.

கிலாபத் இயக்கத்தின்போது கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த முஸ்லிம்களின் அரசியல் உணர்ச்சியும் உத்வேகமும் தணிந்து பல வருடங்கள் கழிந்து விட்டன. கிலாபத் கிளர்ச்சி நடந்த காலத்தில் முஸ்லிம்களிடையே காணப்பட்ட அரசியல் விழிப்பு, மீண்டும் இப்போது தான், அதாவது 1929-30ம் ஆண்டிலிருந்துதான் மறுமலர்ச்சி பெற்றதென்று கூற வேண்டும். இதற்குப் பிறகு ஏறக்குறைய 17 ஆண்டுகள் வரை இடைவிடாமல் ஜனாப் ஜின்னா அவர்கள் இந்திய முஸ்லிம்களுக்காக இரவும் பகலும் இணையற்ற தொண்டு புரிந்து வந்திருக்கின்றார். அதன் விளைவாகவே இன்று இந்திய துணைக் கண்டத்தின் மூன்றிலொரு பகுதியாகிய பாக்கிஸ்தான் ஒரு தனி நாடாகப் பிரிந்து, பூரண அரசுரிமையுடன் விளங்குகிறது.

1928—ல் இலண்டனுக்குச் சென்ற ஜின்னா அவர்கள் அதற்கடுத்த வருடமே இந்தியாவுக்குத் திரும்பினார். ஏன் திரும்பினார், எப்படித் திரும்பினார் என்பதைப்பற்றி எதிரிகள் எழுதும்போது தங்களின் கற்பனைத் திறமையால், "ஜின்னா ஒரு பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கையாளாகத் திரும்பினார்" என்று எழுதுகின்றார்கள்! பிரிட்டிஷ் சைமன் கமிஷனைப் பகிஷ்காரம் செய்யும் அளவுக்குத் தேசியவாதியாகத் திகழ்ந்து, இந்து-முஸ்லிம் ஒற்றுமைக்காக அரும்பாடுபட்டு, அதே சமயத்தில் இலண்டனுக்குச் சென்ற ஜின்னா அவர்கள், அடுத்த ஆண்டில் அங்கிருந்து திரும்பியபோது, தமது பதினாலு கோரிக்கைகள் (Fourteen Points of Jinnah) என்னும் 'வகுப்புவாத' திட்டத்துடன் வந்ததற்குக் காரணம், பிரிட்டிஷ் ராஜ தந்திரிகளின் தூண்டுதலே என்று எதிரிகள் கூறுகின்றனர். அவர்கள் தங்களின் கூற்றுக்கு ஆதாரமாக வேறு ஒரு விஷயத்தையும் எடுத்துக் கூறுகின்றார்கள். அதாவது, ஜின்னாவின் 14 கோரிக்கைகள் வெளிவந்த பிறகு முதல் தடவையாகப் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் உருவாக்கப் பெற்ற மாகாண சுயாட்சி என்னும் 1935 ஆம் வருட அரசியல் சட்டத்தில் அநேகமாக ஜின்னாவின் பதினாலு கோரிக்கைகளும் இடம்பெற்றிருந்தன. எனவே, பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தின் தூண்டுதல் காரணமாகவே ஜின்னா அவர்கள் தமது தேசியத் தன்மையிலிருந்து வெகுதூரம் சென்று, "பதினாலு கோரிக்கைகள்" என்னும் வகுப்பு வாத திட்டத்தை உருவாக்கினார் என்று எதிரிகள் கூறுகின்றனர்.

ஜின்னா அவர்கள் தயாரித்த 14 கோரிக்கைகள், திடீரென ஒரு நாள் அவருடைய இதயத்தில் உதயமாகி உருவானவையல்ல. இந்திய அரசியலில் பல ஆண்டுகளாக அவர் பெற்றிருந்த அனுபவத்தின் விளைவாகவே அந்தப்பதினாலு கோரிக்கைகளும் உருவாயின. முஸ்லிம்கள் ஒரு



மைனாரிட்டி சமூகத்தினர் என்ற உண்மையை ஒருவரும் மறுக்க முடியாது. மத அடிப்படையில் இன்று மைனாரிட்டியாக இருக்கின்ற முஸ்லிம்கள், நாளைக்கு மெஜாரிட்டியாக மாறிவிட முடியாது. எனவே, எப்போதும் மைனாரிட்டியாகவே இருந்துவிடக் கூடிய துர்ப்பாக்கிய நிலையிலுள்ள முஸ்லிம்களுக்குச் சில பாதுகாப்புக்கள் இருக்கவேண்டியது அவசியம் என்பதை அவர் உணர்ந்தார். அரசியல் அதிகாரத்தைச் கொஞ்சங் கொஞ்சமாக இந்திய மக்களுக்கு மாற்றிக் கொடுப்பதே தங்களின் நோக்கம் என்பதை பிரிட்டிஷ் அரசாங்கம் அறிவித்த பிறகு, நாட்டிலே பல சர்வகட்சி மாநாடுகள் கூடிக் கூடிக் கலைந்தன. ஆனால் அவைகளில் முஸ்லிம்களின் உண்மையான குரல் ஒலிக்கவில்லை. மற்றவர்கள் தங்கள் இஷ்டம்போல் கூடுவதும் பேசுவதும் கலைவதுமாக இருந்தனர். அவர்களின் மாநாடுகளில் கலந்துகொண்ட முஸ்லிம் தலைவர்கள் பலர் மாசற்ற தேச பக்தர்களாகவும் திறமைசாலிகளாகவும் இருந்தும், அவர்களின் பேச்சும் கருத்தும் பொருட்படுத்தப்படவில்லை. எனவே, "நாங்களும் வாழமாட்டோம்; பிறரையும் வாழவிடமாட்டோம்" என்ற மனப்பான்மை ஏனைய சமூகத் தலைவர்களிடம் இருப்பதைக் கண்ட ஜின்னா அவர்கள், "வேறு யார் எந்த முடிவுக்கு வந்தாலும் சரி; இதுதான் இந்திய முஸ்லிம்களின் ஏகோபித்த விண்ணப்பம்" என்று அந்தப் பதினாலு கோரிக்கைகளையும் தயார் செய்தார். அந்தக் கோரிக்கைகள் ஒவ்வொன்றும் முஸ்லிம்களின் பாதுகாப்புக்கு அரண் அமைப்பதாக இருக்கின்றதேயன்றி, மற்றவர்களுக்கு முரண் செய்வதாகவோ, அவர்களின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்துவதாகவோ இல்லை. அந்தக் குறிப்புக்களை (Points) மேலெழுந்தவாரியாகப் பார்த்தாலும் இந்த உண்மை தெளிவாகத் தெரியும்.

ஜின்னாவின் 14 குறிப்புக்கள் என்னவென்று பார்ப்போம்.

1. "இந்தியாவின் எதிர்கால அரசியல் அமைப்பு 'பெடரல்' (சமஷ்டி) ஆட்சியை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். ஆனால் மாகாணங்களைப் பொறுத்த விஷயங்களை முடிவு செய்வதில் அந்தந்த மாகாணங்களுக்கே பூரண அதிகாரம் இருத்தல்வேண்டும்.

2. எல்லா மாகாணங்களுக்கும் ஒரே மாதிரியான தன்னாட்சி உரிமை இருக்கவேண்டும்.

3. ஒவ்வொரு மாகாணத்திலும் சிறுபான்மை சமூக மக்களுக்குப் போதுமான (அதாவது விகிதாசாரத்துக்குச் சற்று அதிகமாகவே) பிரதிநிதித்துவம் அளிக்கப்படவேண்டும். முஸ்லிம்கள் பெரும்பான்மையாகவுள்ள எந்த மாகாணத்திலும் அவர்களின் பிரதிநிதித்துவத்தை மற்றவர்களுடன் சமத்துவ நிலைக்கு, அல்லது சிறுபான்மை

யினர் நிலைக்குக் கொண்டுவரக் கூடாது.

4. இந்தியா சட்டசபையில் முஸ்லிம்கள் மூன்றிலொரு பகுதிக்குக் குறையாமல் இருத்தல் வேண்டும்.

5. இப்போது இருந்து வருவது போலவே வகுப்புவாரி பிரதிநிதித்துவம் தனித் தொகுதித் தேர்தல் முறையிலேயே இருத்தல் வேண்டும்.

6. எதிர்காலத்தில் எப்போதாவது மாகாண எல்லைகள் மாற்றியமைக்கப்பட நேர்ந்தால், பஞ்சாப், வங்காளம் ஆகிய மாகாணங்களில் முன்னமே முஸ்லிம்களுக்கு இருந்து வருகின்ற பெரும்பான்மைப் பிரதிநிதித்துவம் குறைக்கப்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

7. எல்லா சமூகத்தினருக்கும் அவரவர் மத சம்பந்தமான பிரச்னைகளில் ஒரு முடிவுக்கு வர அந்தந்த சமயத்தினருக்கே முழு உரிமையும் இருக்கவேண்டும். சமய சம்பந்தமான கிரியைகளை நிறைவேற்றவும், அவர்களின் மதபோதனைகளைப் பிரசாரம் செய்யவும், அது சம்பந்தமான கல்வியைப் போதிக்கவும், சங்கங்கள் அமைத்துக் கொள்ளவும் அந்தந்த வகுப்பினருக்குப் பூரண உரிமைகள் அளிக்கப்பட வேண்டும்.

8. சட்டசபையிலோ அல்லது ஒரு அரசாங்கப் பொது ஸ்தாபனத்திலோ ஒரு சமூகத்தின் உறுப்பினர்களில் நாலில் மூன்று பகுதியினர் தங்கள் சமூகத்துக்குத் தீங்கு விளைக்கத் தக்கது என்று எந்த முடிவையும் எதிர்த்தால் அது கைவிடப்படவேண்டும்.

9. சிந்து மாகாணத்தை பம்பாய் மாகாணத்திலிருந்து பிரித்துவிட வேண்டும்.

10. வடமேற்கு எல்லைப்புற மாகாணத்துக்கும் பலுசிஸ்தானத்துக்கும் ஏனைய மாகாணங்களுக்கு இருப்பதுபோன்ற சீர்திருத்தங்களும் சட்டதிட்டங்களும் வழங்கப்படவேண்டும்.

11. அரசாங்க உத்தியோகங்களில் போதுமான விகிதாசாரமும் பாதுகாப்புக்களும் இருத்தல் வேண்டும்.

12. முஸ்லிம்களின் கல்வி; கலை, மொழி, மதம் ஆகியவைகளுக்குப் பாதுகாப்பும், அவர்களின் கல்வி நிலையங்களுக்கு சர்க்காரின் பண வுதவியும் இருந்து வருமாறு சட்ட திட்டங்களில் நிபந்தனைகள் இருந்துவர வேண்டும்.

13. மத்திய சர்க்காரின் மந்திரி சபையிலும் மாகாண மந்திரி சபைகளிலும் இருக்கின்ற மந்திரிகளின் மூன்றில் ஒரு பகுதியினர் முஸ்லிம்களாக இருந்தாலொழிய அந்த மந்திரி சபைகளை சட்ட சம்பந்தமானது என்று ஒப்புக் கொள்ளக்கூடாது.

14. இந்திய சமஷ்டிக்கு உட்பட்ட மாகாணங்கள், சமஸ்தானங்களின் அனுமதியில்லாமல் இந்திய அரசியல் திட்டங்களில் எந்தவிதமான மாறுதலும் செய்யலாகாது.



*மாபெரும் வல்லரசுகளெல்லாம், பார்த்துப் பெருமூச்சு விடத்தகுந்த வன்மைமிக்க நவீனத் துருக்கியை உருவாக்கிய கமால் அத்தாதுர்க் ஒரு நாள் இறந்துபட்டார் என்ற சோகச் செய்தியைக் கேட்டு, குழந்தைகளைப்போல் தேம்பித் தேம்பி யழுதனர் அவரது நாட்டு மக்கள்.*

நவீனத் துருக்கியின் நற்றவத் தந்தை

# கமால் பாஷா

ஒரு சர்வாதிகாரிதான். அவர் ஆனால் அவரது சர்வாதிகாரச் செயல்கள் நாட்டு மக்களின் நன்மை ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டிருந்தன. அவர் எது செய்தாலும் அது தங்களின் நன்மைக்காகவே இருக்கும் என்று அவரது நாட்டு மக்கள் நம்பினார்கள். பெயரளவில் ஹிட்லரையும் முஸோலினியையும் போன்ற சர்வாதிகாரிதான் அவரும். ஆனால் அவருடைய சர்வாதிகாரத்தை நாட்டு மக்கள் நன்கு வரவேற்றனர்! புரட்சிகரமான அவருடைய திட்டங்களுக்குப் பூரண ஆதரவு தந்தனர். "ஐரோப்பாவின் நோயாளி என்று அழைக்கப் பெற்ற எங்கள் நாட்டை கடைசிக்காலத்தில் காத்து ரட்சிக்க வந்த எந்தையே!" என்று கூவியழைத்து, "துருக்கியின் தந்தை" என்றும் அவரை அன்புடன் அழைக்கலாயினர்.

19-ம் நூற்றுண்டின் இறுதியிலே அவர் பிறந்திராவிட்டால், வீரத் துருக்கியர்களின் வாழ்வும் அவர்களின் வளநாடும் என்னவாகியிருக்கும் என்று சற்றே சிந்தித்துப் பார்க்கின்ற சரித்திராசிரியர்கள் என்ன எழுதியிருப்பார்கள்? வெறும் சூன்யமாகப் போயிருக்குமே என்றுதான் எழுதி வைத்திருப்பார்கள்! ஆனால் அவர் பிறந்ததால் அந்த நாடு பெற்ற பெருமையைப் பாருங்கள்!

## வீரத் துருக்கியர்பற்றி வெண்டல் வில்கி

"ஆக்கிரமிப்பு எண்ணத்துடன் எந்த அந்நியன்—அவன் அமெரிக்கனாக இருந்தாலும் சரி, ருஷ்யனாக இருந்தாலும் சரி—எங்கள் நாட்டிலே நுழையத் துணிந்தால், அவனுடைய கால்கள் உடனே முறிக்கப்படும்" என்று ஒவ்வொரு துருக்கியனும் வீராவேசத்துடன் உரத்துக் கூவுகின்றான் என்று நவீனத் துருக்கியை நேரிற் கண்ட வெண்டல் வில்கி தமது 'ஒரே உலகம்' என்னும் நூலில் எழுதுகின்றார்.

"உதுமானிய சாம்ராஜ்யம் உருக்குலையப் போகிறது. அதன் தலைமைப் பீடமாகிய துருக்கியும் தலைசாயப் போகிறது" என்று ஒரு காலத்தில் எக்காளமிட்டுக் கொண்டிருந்த ஐரோப்பிய நாடுகள், இன்று தங்கள் நாடுகளிலே கம்யூனிஸம் பரவாமல் இருப்பதற்குப் பாதுகாப்பாக அந்த நவீனத் துருக்கியைத்தான் நம்பியிருக்கின்றன! ஒரு காலத்தில் 'ஐரோப்பாவின் நோயாளி'

என்று அழைத்த அதே துருக்கியர் நாட்டைத்தான் இன்று அந்த ஐரோப்பியர்கள் 'நவீனத்துருக்கி' என்று பெருமையுடன் பேசுகின்றனர்!

பெரிய வல்லரசுகள் கூடப் பார்த்துப் பெருமூச்சு விடத் தகுந்த அளவுக்கு அந்த நவீனத் துருக்கியை உருவாக்கிய கமால் அத்தாதுர்க், 1938-ம் ஆண்டிலே, நவம்பர் 10-ந்தேதியன்று தமது 57-வது பிராயத்தில் இஸ்தம்பூலில் இறந்துபட்டார் என்ற சோகச் செய்தியைக் கேட்ட துருக்கிய மக்கள் இடிமுழக்கம் கேட்டவர்போல் துடிதுடித்துப் போயினர்; தேம்பித் தேம்பியழுதனர். அவர்களின் கண்களிலிருந்து கண்ணீர் ஆறாய்ப் பெருகியது.

## வீரத் தளபதியும் விரைந்தார்

வாழ்வதா வீழ்வதா, என்ற நிலையில் இருந்த துருக்கியை வாழ வைத்த அந்த வீரசிங்கத்தின் வயது பொன்றியது. ஆனால் அவரது பொன்னுடல் இஸ்தம்பூலிலிருந்து இன்றைய தலைநகராகிய அங்காராவுக்குத் தூக்கிச் செல்லப்பெற்றது. அங்கே உலக நாடுகளெல்லாம் தங்கள் பிரதிநிதிகளை அனுப்பி, மறைந்த மாவீரருக்குத் தங்களின் மரியாதைகளைத் தெரிவித்துக்கொண்டன. அந்த அநுதாபிகளின் கூட்டத்தில் சர். ஐயன் ஹாமில்ட்டன் என்னும் பிரிட்டிஷ் தளகர்த்தரும் ஒருவர். அவர்தான் டார்டனல்ஸ் முற்றுகையில் நேசநாட்டினர் சார்பாகத் துருக்கியரை எதிர்த்துப் போர் புரிந்து, முஸ்தபா கமால் அவர்களால் முறியடிக்கப்பெற்ற வீரத் தளபதி. எத்தனையோ போர்முனைகளில் வெற்றிகண்ட அந்த வீரத் தளபதியும் இறுதியில் தன்னை வெற்றிகொண்ட மாவீரருக்குத் தமது மரியாதைகளைத் தெரிவித்துக்கொள்ள அங்காராவுக்கே ஆவலுடன் சென்றிருந்தார்.

## மாவீரருக்கு மணிமண்டபம்

கமால் அத்தா துர்க் அன்று புதைக்கப்பெற்ற இடத்தில் இப்போதுதான் 30 லட்சம் பவுன் செலவில் சிறந்த மணிமண்டபம் ஒன்று கட்டப்பட்டு வருகின்றது. கமாலின் கல்லறை இதுகாறும் அங்காராவிலுள்ள புராதனக் காட்சிச் சாலையொன்றில் ஆடம்பரமின்றி சாதாரண சலவைக் கற்களால் சமைக்கப்பெற்றிருக்கிறது. அந்தச் காட்சிச் சாலையின் வெளியே ஒரு குதிரையின்மீது மலர்களால் அலங்கரிக்கப்பெற்ற அத்தா துர்க்கின் உருவம் கம்பீரமாக வீற்றிருக்கிறது.

காட்சிச் சாலையில் கட்டப்பெற்றுள்ள கமாலின் கல்லறை நிரந்தரமானதல்ல. அது தற்காலிகமாகவே அமைக்கப் பெற்றதாகையால், நிரந்தரமான ஞாபகச் சின்னமாக அந்த மாவீரரின் கல்லறையின்மீது கம்பீரமான கட்டிடமொன்றை எழுப்பும்பொருட்டு, அகில உலகப் போட்டியொன்று அங்காராவிலே நிகழ்ந்தது.

அந்தப் போட்டியில் கலந்துகொண்ட பல்வேறு நாட்டவர்களுள் இத்தாலியர் ஒருவரும் துருக்கியர் ஒருவரும் ஜெர்மானியர் ஒருவரும் கூறிய யோசனைகளின்மீதே, இப்போது அங்காராவில் ஓங்கி வளர்ந்த ஒரு குன்றின் மீது அந்த ஆடம்பரமிக்க கோரி அமைக்கப்பெற்று வருகின்றது. அந்தக் கட்டிடம் இந்த ஆண்டுக்குள் கட்டி முடிக்கப்பெற்றுவிடும். அதுவே அத்தா துர்க்கின் நிரந்தர ஞாபகச் சின்னமாக நிலைபெற்று விளங்கும். துருக்கியர்களின் வீரத்துக்கும் தேசப் பற்றுக்கும் அந்த மாபெரும் வீரரின் கல்லறையே சிறந்த சின்னமாகக் காட்சியளிக்கும்.

காஜீ முஸ்தபா கமால் ஒரு சாதாரண குடும்பத்தில் பிறந்தவர்தான். சிறு பிராயத்திலிருந்தே சுறுசுறுப்பான சுபாவமும் சண்டையில் விருப்பமும் உடைய இவர், இராணுவப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து வகுப்பிலேயே முதன்மையானவராக விளங்கினார். 'விளையும் பயிர் முளையிலே' என்பதுபோல் வாலிபப் பருவத்திலேயே அவருடைய கூரிய பார்வையும் கம்பீரத் தோற்றமும் மிடுக்கான நடையும் வருங்காலத்தில் ஒரு மாவீரராக மாநிலத்திலே மாண்புற்று விளங்குவார் என்று அறிவித்தன.

இராணுவத்தில் சேர்ந்தவுடன் பல பொறுப்புள்ள பெரிய பதவிகளை வகித்தார் கமால் அத்தா துர்க். 1911-ம் ஆண்டிலே திரிப்போலியில் இத்தாலியருக்கும் துருக்கியருக்குமிடையே நடந்த போரில் தளபதி அன்வர் பாஷாவின் தலைமையில் அவர் போர் புரிந்தார். அதற்குப் பிறகு நடந்த பால்கன் போர்களிலும் அவர் ஒரு இராணுவ அதிகாரியாகவே நின்று எதிரிகளையெல்லாம் முறியடித்தார், இதற்குப் பின்பு நடந்த முதலாவது உலகப் போரிலே டார்னல்ஸைப் பாதுகாப்பதற்காக இவர் நடத்திய வீரப்போராட்டம் உலக வரலாற்றிலே ஒரு உன்னதமான இடத்தைப் பெற்றுக்கொண்டது.

போர்க்களத்திலே கமால் கண்ட வெற்றிகள் யாவும் வியந்து வியந்து பாராட்டத் தக்கவைதான். ஆனால் அவரது தாய்நாடு இறுதியில் தோற்றுப் போய்விட்டதாகவே உலகம் தீர்ப்புக்கூறிவிட்டது! முதல் உலக மகா யுத்தத்தில் ஜெர்மானி தோற்றுப்போய்விட்டது. எனவே, ஜெர்மானியின் கட்சியில் நின்று போர் புரிந்த துருக்கியும் தோற்றுப் போய்விட்டதாகவே மதிக்கப் பெற்றது.

துருக்கி தோற்றுப்போய்விட்டது. அது உள் நாட்டுக் குழப்பங்களாலும் வெளி நாடுகளின் தாக்குதல்களாலும் சின்னபின்னப்பட்டு சீர்குலையுந்தறுவாயில் இருந்தது.

வீரத் துருக்கியரும் அவர்களின் வள நாடும் இனி வாழ்வதா அல்லது வீழ்வதா என்ற நெருக்கடியான இந்த நேரத்தில், யாராவது ஒருவர் எதிர்பாராமல் திடீரெனத் தோன்றி, துருக்கியைக் காப்பாற்றியாகவேண்டும்.

கிரேக்கர்கள் வெகு வேகமாக முன்னேறிக் கொண்டிருக்கின்றனர். இன்னும் சில நாட்களில் அவர்கள் ஸ்மர்ணாவில் தங்கள் படைகளை இறக்கிவிடுவார்கள். அந்த நிலையில்தான் 1919-ல் வீரர் கமால், கிழக்கு அனட்டோலியாவில் துருக்கியப் படைகளின் இன்ஸ்பெக்டர் ஜெனரலாக இருந்து வந்தார். இப்போது துருக்கிய மக்களையெல்லாம் ஒன்றுபடச் செய்யவும், அவர்களின் வீர உணர்ச்சியைத் தட்டி எழுப்பவும் ஒருவர் தேவையாக இருந்தது. இந்த மாபெரும் பொறுப்பை மகத்தான மனவுறுதியுடன் ஏற்றுக்கொள்ளும் இணையற்ற திறமையும் தைரிமும் தன்னிடமே இருப்பதாகக் கமால் நினைத்தார். எனவே கிரேக்கர்களை எதிர்த்து முறியடிப்பதற்காக ஒரு சிறிய சேனையைத் திரட்டினார். அங்காரவையும் அவரது தலைமைப் பீடமாக

அமைத்துக்கொண்டார். இதற்குப் பிறகு நாடெங்கும் தோன்றிய தேசபக்தியும் வீரமும் கிரேக்கர்களைத் திகைக்கச் செய்தன. அவர்களை அனட்டோலியாவிலிருந்து விரட்டியடிக்க அதுவே காரணமாயிருந்தது.

கிரேக்கர்களால் துருக்கியர் நாட்டுக்குத் தோன்ற விருந்த அபாயம் நாளுக்கு நாள் அதிகரித்து வருவதைக் கண்ட துருக்கிய அதிகாரி யொருவர், தமது மனைவி மக்களை அங்காராவிலிருந்து பத்திரமாக அப்புறப்படுத்திவிட வேண்டுமென்று விரும்பினார். இதைப் பற்றி அவர் தமது தளகர்த்தர் கமாலுக்குத் தெரிவித்தபோது, "உமது மனைவி மக்களுடன் வெளியேறுவதற்கு உனக்கும் அனுமதி தருகிறேன்" என்று சற்றுந் தயங்காமல் அந்த வீரத்தளபதி மறுமொழி கூறினாராம்!

## கிலாபத் ஒழிந்தது

ஒரு காலத்தில் உன்னதமாக வன்மையோடு விளங்கிய உதுமானிய சாம்ராஜ்யம் இருந்தவிடம் தெரியாமல் மறைந்து விட்டது. எனவே, இஸ்லாமியக் கிலாபத் ஆட்சியால் இனி எந்த விதமான பயனுமில்லை என்பதைக் கண்ட கமால், உலக முஸ்லிம்களின் மாபெரும் எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் அந்த கிலாபத் ஆட்சியை ஒழித்துக் கட்டினார். எதிரிகளால் எந்த நிமிஷமும் முறியடிக்கப்படக் கூடிய அளவுக்கு வலிமை குன்றி யிருந்த ஒரு நாடு, உலக முஸ்லிம்களுக்கெல்லாம் தலைமை தாங்குகிறதென்றால், அது ஒரு பெரிய கேலிக்கூத்தாகவே கமாலுக்குத் தோன்றியது. எனவே, அந்தக் கிலாபத்தை ஒழித்துக் கட்டுவதில் அவர் உறுதியாக நின்றார்.

## குடிஅரசு மலர்ந்தது

பிற்போக்கு வாதிகளின் புகலிடமாகவும் இஸ்லாமிய எதிரிகளின் கேலித்தனத்துக்கு இலக்காகவும் விளங்கிய அந்தக் கிலாபத் ஆட்சியை ஒழித்து, 1923 அக்டோபர் 23-ந்தேதி யன்று குடிஅரசு ஆட்சியை மலரச் செய்தார். அந்தக் குடிஅரசின் முதல் ஜனாதிபதியாக அவரே தேர்ந்தெடுக்கப் பெற்றார்.

"துருக்கிய தேசிய அசெம்பிளி" என்னும் துருக்கிப் பார்லிமெண்டு இப்போது கமாலின் பரிபூரண ஆதிக்கத்துக்கு வந்து விட்டது. அதில் கமாலின் கட்சியினரே மிக அதிகமாக இருந்தனர். எனவே, சட்டப்படியும் 'கிலாபத்' ஒழிக்கப்பட்டு விட்டதாக அந்த தேசிய அசெம்பிளியில் முடிவு செய்யப்பட்டது.

## சீர்திருத்தங்கள்

இதற்குப் பின்னர், சீரழிந்து போன உதுமானிய சாம்ராஜ்யத்தை மீண்டும் புனர் நிர்மாணம் செய்யும் வேலையில் முழு மூச்சுடன் இவர் ஈடுபட்டார். புரட்சிகரமான பல சமய சமுதாய சீர்திருத்தங்களை நாட்டிலே புகுத்த நல்ல திட்டங்களை வகுத்தார். அவைகளை எதிர்த்துக் கிளம்பிய கிளர்ச்சிகளையும் கலகங்களையும் தயவு தாட்சண்யமின்றி அடக்கிப்போட்டு அமைதி நிலவச் செய்தார்.

'துருக்கித்தொப்பி' எனப் பெயர் பெற்ற 'பெஸ்' குல்லாக்களைத் துருக்கியர்கள் அணிவதை அவர் விரும்பவில்லை. ஏனைய ஐரோப்பியர்களைப் போலவே துருக்கியரும் 'ஹாட்' தரித்துக் கொள்ள வேண்டுமென்று உத்தரவிட்டார்.

அவர் செய்த சீர்திருத்தங்களில் மிகவும் முக்கியமானவை மூன்று துருக்கி மொழியை லத்தீன்



எழுத்துக்களில் எழுதவும் படிக்கவும் வேண்டுமென்று உத்தரவிட்டார். துருக்கியின் கல்வி வளர்ச்சிக்கு இந்த எழுத்துச் சீர்திருத்தம் இணையற்ற வெற்றியைத் தந்திருக்கிறது.

ஒருவன் ஒருத்திக்கு அதிகமாக மணக்கும் உரிமையை இஸ்லாம் அனுமதிக்கின்றதாயினும், துருக்கியின் தேசிய வாழ்வில் அதனால் பல தீமைகள் முளைத்தன. எனவே, ஒருவனும் ஒருத்தியும் என்ற மணமுறையை அவர் வலியுறுத்தி, அதையே சட்டமாக்கினார். பெண்களுக்குப் பொது வாழ்வில் சம உரிமைகளை வழங்கு மாறு அரசியலை வகுத்தார்.

புரட்சிகரமான இந்த சீர்திருத்தங்களைக் கண்டு புரோகிதர்கள் மருண்டார்கள். பழமை விரும்பிகள் போருக்கு எழுந்தனர். பிற்போக்காளர்கள் தங்களின் படை வரிசைகளை அணியணியாக நிறுத்தி ஆர்ப்பாட்டம் செய்தனர். எனினும் அத்தாதுர்க் அவர்கள் அணுவளவும் அஞ்சினாரில்லை! முன் வைத்த காலைப் பின்வாங்காமல் அவர் தமது இலட்சியப் பாதையில வெகு வேகமாக முன்னேறிக் கொண்டிருந்தார்.

நாட்டுக்கு நன்மையான நல்ல காரியங்கள் என்று உண்மையாக அவர் நம்பிச் செய்த சீர்திருத்தங்களை எதிர்த்தவர்களிற் பலர் நாடு கடத்தப்பட்டார்கள்; சிலர் சிறையிலிடப்பட்டார்கள்; மற்றும் பலர் தூக்கிலிடப்பட்டார்கள்.

அரசியல் துறையிலும் இராணுவத்திலும் மிக வேகமாக மறுமலர்ச்சி பெற்று விட்ட நவீனத் துருக்கி, 1934-ல் உருவான 5 வருட திட்டத்தின்படி விவசாயத்திலும் கல்வியிலும் சுகாதாரத்திலும் படிப்படியாக முன்னேறி வந்திருக்கிறது.

இன்று துருக்கியின் மதிப்பு உலக நாடுகளின் கண் முன்னே மிக மிக உயர்ந்து விளங்குகிறது.

"ஐரோப்பாவின் நோயாளி" என்று சில ஆண்டுகளுக்கு முன் வரை அவமதிக்கப்பெற்ற அந்தத் துருக்கியை, இன்று சமீபக் கிழக்கிலேயே ஒரு சக்தி வாய்ந்த நாடாக விளங்கச் செய்து மறைந்த அந்த மாவீரரை இந்த மாநிலம் மறக்க முடியுமா?

அமைத்துக்கொண்டார். இதற்குப் பிறகு நாடெங்கும் தோன்றிய தேசபக்தியும் வீரமும் கிரேக்கர்களைத் திகைக்கச் செய்தன. அவர்களை அனட்டோலியாவிலிருந்து விரட்டியடிக்க அதுவே காரணமாயிருந்தது.

கிரேக்கர்களால் துருக்கியர் நாட்டுக்குத் தோன்ற விருந்த அபாயம் நாளுக்கு நாள் அதிகரித்து வருவதைக் கண்ட துருக்கிய அதிகாரி யொருவர், தமது மனைவி மக்களை அங்காராவிலிருந்து பத்திரமாக அப்புறப்படுத்திவிடவேண்டுமென்று விரும்பினார். இதைப் பற்றி அவர் தமது தளகர்த்தர் கமாலுக்குத் தெரிவித்தபோது, "உமது மனைவி மக்களுடன் வெளியேறுவதற்கு உமக்கும் அனுமதி தருகிறேன்" என்று சற்றுந் தயங்காமல் அந்த வீரத்தளபதி மறுமொழி கூறினாராம்!

## கிலாபத் ஒழிந்தது

ஒரு காலத்தில் உன்னதமாக வன்மையோடு விளங்கிய உதுமானிய சாம்ராஜ்யம் இருந்தவிடம் தெரியாமல் மறைந்து விட்டது. எனவே, இஸ்லாமியக் கிலாபத் ஆட்சியால் இனி எந்த விதமான பயனுமில்லை என்பதைக் கண்ட கமால், உலக முஸ்லிம்களின் மாபெரும் எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் அந்த கிலாபத் ஆட்சியை ஒழித்துக் கட்டினார். எதிரிகளால் எந்த நிமிஷமும் முறியடிக்கப்படக் கூடிய அளவுக்கு வலிமை குன்றி யிருந்த ஒரு நாடு, உலக முஸ்லிம்களுக்கெல்லாம் தலைமை தாங்குகிறதென்றால், அது ஒரு பெரிய கேலிக்கூத்தாகவே கமாலுக்குத் தோன்றியது. எனவே, அந்தக் கிலாபத்தை ஒழித்துக் கட்டுவதில் அவர் உறுதியாக நின்றார்.

## குடிஅரசு மலர்ந்தது

பிற்போக்கு வாதிகளின் புகலிடமாகவும் இஸ்லாமிய எதிரிகளின் கேலித்தனத்துக்கு இலக்காகவும் விளங்கிய அந்தக் கிலாபத் ஆட்சியை ஒழித்து, *1923 அக்டோபர் 23*-ந்தேதி யன்று குடிஅரசு ஆட்சியை மலரச் செய்தார். அந்தக் குடிஅரசின் முதல் ஜனாதிபதியாக அவரே தேர்ந்தெடுக்கப் பெற்றார்.

"துருக்கிய தேசிய அசெம்பிளி" என்னும் துருக்கிப் பார்லிமெண்டு இப்போது கமாலின் பரிபூரண ஆதிக்கத்துக்கு வந்து விட்டது. அதில் கமாலின் கட்சியினரே மிக அதிகமாக இருந்தனர். எனவே, சட்டப்படியும் 'கிலாபத்' ஒழிக்கப்பட்டு விட்டதாக அந்த தேசிய அசெம்பிளியில் முடிவு செய்யப்பட்டது.

## சீர்திருத்தங்கள்

இதற்குப் பின்னர், சீரழிந்து போன உதுமானிய சாம்ராஜ்யத்தை மீண்டும் புனர் நிர்மாணம் செய்யும் வேலையில் முழு மூச்சுடன் இவர் ஈடுபட்டார். புரட்சிகரமான பல சமய சமுதாய சீர்திருத்தங்களை நாட்டிலே புகுத்த நல்ல திட்டங்களை வகுத்தார். அவைகளை எதிர்த்துக் கிளம்பிய கிளர்ச்சிகளையும் கலகங்களையும் தயவு தாட்சண்யமின்றி அடக்கிப்போட்டு அமைதி நிலவச் செய்தார்.

'துருக்கித்தொப்பி' எனப் பெயர் பெற்ற 'பெஸ்' குல்லாக்களைத் துருக்கியர்கள் அணிவதை அவர் விரும்பவில்லை ஏனைய ஐரோப்பியர்களைப் போலவே துருக்கியரும் 'ஹாட்' தரித்துக் கொள்ள வேண்டுமென்று உத்தரவிட்டார்.

அவர் செய்த சீர்திருத்தங்களில் மிகவும் முக்கியமானவை மூன்று துருக்கி மொழியை லத்தீன் எழுத்துக்களில் எழுதவும் படிக்கவும் வேண்டுமென்று உத்தரவிட்டார். துருக்கியின் கல்வி வளர்ச்சிக்கு இந்த எழுத்துச் சீர்திருத்தம் இணையற்ற வெற்றியைத் தந்திருக்கிறது.

ஒருவன் ஒருத்திக்கு அதிகமாக மணக்கும் உரிமையை இஸ்லாம் அனுமதிக்கின்றதாயினும், துருக்கியின் தேசிய வாழ்வில் அதனால் பல தீமைகள் முளைத்தன. எனவே, ஒருவனும் ஒருத்தியும் என்ற மணமுறையை அவர் வலியுறுத்தி, அதையே சட்டமாக்கினார். பெண்களுக்குப் பொது வாழ்வில் சம உரிமைகளை வழங்குமாறு அரசியலை வகுத்தார்.

புரட்சிகரமான இந்த சீர்திருத்தங்களைக் கண்டு புரோகிதர்கள் மருண்டார்கள். பழமை விரும்பிகள் போருக்கு எழுந்தனர். பிற்போக்காளர்கள் தங்களின் படை வரிசைகளை அணியணியாக நிறுத்தி ஆர்ப்பாட்டம் செய்தனர். எனினும் அத்தாதுர்க் அவர்கள் அணுவளவும் அஞ்சினாரில்லை! முன் வைத்த காலைப் பின்வாங்காமல் அவர் தமது இலட்சியப் பாதையில வெகு வேகமாக முன்னேறிக்கொண்டிருந்தார்.

நாட்டுக்கு நன்மையான நல்ல காரியங்கள் என்று உண்மையாக அவர் நம்பிச் செய்த சீர்திருத்தங்களை எதிர்த்தவர்களிற் பலர் நாடு கடத்தப்பட்டார்கள்; சிலர் சிறையிலிடப்பட்டார்கள்; மற்றும் பலர் தூக்கிலிடப்பட்டார்கள்.

அரசியல் துறையிலும் இராணுவத்திலும் மிக வேகமாக மறுமலர்ச்சி பெற்று விட்ட நவீனத் துருக்கி, *1934*-ல் உருவான 5 வருட திட்டத்தின்படி விவசாயத்திலும் கல்வியிலும் சுகாதாரத்திலும் படிப்படியாக முன்னேறி வந்திருக்கிறது.

இன்று துருக்கியின் மதிப்பு உலக நாடுகளின் கண் முன்னே மிக மிக உயர்ந்து விளங்குகிறது.

"ஐரோப்பாவின் நோயாளி" என்று சில ஆண்டுகளுக்கு முன் வரை அவமதிக்கப்பெற்ற அந்தத் துருக்கியை, இன்று சமீபக் கிழக்கிலேயே ஒரு சக்தி வாய்ந்த நாடாக விளங்கச் செய்து மறைந்த அந்த மாவீரரை இந்த மாநிலம் மறக்க முடியுமா?

*'' பாகிஸ்தான் பிழைக்குமா ?'' என்று சந்தேகப்பட்டவர்களுள் சர். ஆல்பிரட் வாட்ஸனும் ஒருவர். அவர் இப்போது 'கிரேட் பிரிட்டன் அண்டு ஈஸ்ட்' என்னும் இலண்டன் பத்திரிகையில் என்ன எழுதுகிறார் பாருங்கள் !*

# பாக்கிஸ்தானின் எதிர்காலம்

சர். ஆல்பிரட் வாட்ஸன்

இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையே இருந்த பொருளாதார ஏற்றத் தாழ்வுகளைப் பற்றி முன்னே சொல்லப்பட்ட ஜோசியமெல்லாம் நடைமுறையில் பொய்த்துப் போய்விட்டன. நாட்டுப் பிரிவினைக்குப் பின்பு பாகிஸ்தான் தனது பொருளாதாரத்தில் மிகவும் பலவீனமாயிருக்குமென்றும், பிரிவினையால் ஏற்பட்ட அதிர்ச்சியை அந்த நாடு தாங்க முடியாதென்றும் தீர்க்கதரிசிகள் பலர் நம்பினார்கள். அப்படி நம்பியவர்களுள் யானும் ஒருவன் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் அந்த நம்பிக்கை முற்றிலும் தவறானது என்பதையே சென்ற இரண்டு வருட காலம் மெய்ப்பித்துவிட்டது. மாகாணங்களிலும் மத்திய சர்க்காரிலும் முறையான (வரவுக்கும் செலவுக்கும் சரிக்கட்டும்படியான) பட்ஜட்டை பாகிஸ்தான் தயாரித்தது. இந்தியாவுடன் அதன் வியாபாரம் மிகவும் இலாபகரமாகவே நடந்து வருகிறது. அந்த நாட்டு மக்கள் தங்களின் குறைந்த பொருள்வளத்தையும் புதிய வழிகளில் ஈடுபடுத்தி வருகின்றார்கள். அதன் முன்னேற்றம் இப்போது அதிக வேகமாக இல்லாவிட்டாலும், கூடிய விரைவில் வன்மையும் தன்னம்பிக்கையுமுள்ள ஒரு சிறந்த அரசாங்கம் அங்கே நிர்மாணிக்கப்பட்டுவிடும். இந்த நம்பிக்கைக்கு ஒரு காரணம் இருக்கிறது. அதாவது, அந்நிய நாட்டு மூலதன விஷயத்தில் இந்தியாவைவிடப் பாக்கிஸ்தான் எத்தனையோ பங்கு பிரத்தியட்ச உண்மையை உணர்ந்து நடந்து கொள்ளுகிறது. அபிவிருத்தியடையக் கூடிய ஆரம்ப நிலையில் இருக்கின்ற எல்லா நாடுகளையும்போல், பாக்கிஸ்தானும் ஒரு உண்மையை உணர்ந்திருக்கிறது. அதாவது, வெளிநாட்டுப் பொருளாதார உதவியையும் தொழில் நிபுணத்துவத்தையும் வரவேற்றால்தான், வெகு வேகமான பொருளாதார முன்னேற்றம் ஏற்படக்கூடும் என்ற உண்மையைப் பாக்கிஸ்தான் உணர்ந்து கொண்டுவிட்டது. வெளிநாட்டு உதவிகளைப் பயன்படுத்திக்கொண்டு உள்நாட்டின் செல்வத்தை வளர்த்துக்கொண்டால், நாளடைவில் அந்நியநாட்டுக்குச் சொந்தமான சொத்துக்களையும் சிறுகச் சிறுக விலைக்கு வாங்கிக்கொள்ள முடியும்.



பிரிட்டிஷ் அரசாட்சி முடிவெய்துவதற்கு முன்பே இந்தியாவில் இந்த முறை அமலுக்கு வந்துவிட்டது. இலாபகரமாய் நடக்கின்ற பல தொழில்களின் நிர்வாகம் மட்டும் பிரிட்டிஷ்காரர்களிடமே இருந்தாலும், அவைகளின் மூலதனத்தில் பெரும் பகுதி இந்தியர்களின் கையில் ஏற்கனவே வந்துவிட்டது. அதுவும் யுத்தம் முடிந்தவுடன் மூலதனம் கைமாறுவது இன்னும் துரிதமாகிவிட்டது. அந்தக் காலத்தில் எத்தனையோ கம்பெனிகளின் பெருமையுடன் விளங்கிய நிர்வாகமெல்லாம் இப்போது இந்தியர்களிடமே வந்துவிட்டது. அந்தக் கம்பெனிகளின் பழைய பெயர்களெல்லாம் அப்படியே அழியாமல் இருக்கலாம். ஆனால் மேஜைகளுக்குப் பக்கத்தில் இருப்பவர்களிற் பெரும்பாலோர் இந்தியர்களாகவே இருக்கின்றனர்.

இன்று தொழில் துறையில் இந்தியாவைவிடப் பாக்கிஸ்தான் மிகவும் நல்ல நிலையில் இருப்பதற்கு முதலாவது காரணம், பாக்கிஸ்தானின் ஏழ்மை என்று கூறலாம். பணமின்மையால் பாக்கிஸ்தானிகள் எந்தத் தொழிலையும் தாங்களாகவே நடத்திக் கொள்ள முடியவில்லை. இரண்டாவதாகத் தொழில் வளர்ச்சியெல்லாம் இந்துக்கள் அதிகமாக வாழ்கின்ற பிரதேசத்திலேயே இருக்கின்றன.

பாக்கிஸ்தானின் மிகப் பெரிய தொழிலாக இருப்பது அதன் விவசாயம். கிழக்குப் பாக்கிஸ்தானில் சணலும், தேயிலையும், அரிசியும் விளைகின்றன. பஞ்சாபில் கோதுமை விளைகிறது. மேற்குப் பாக்கிஸ்தானில் பெரும்பாலான இடங்களில் பருத்தி விளைகிறது. இவையெல்லாம் மிக அவசரமாகத் தேவைப்படுகின்ற பொருள்கள்.

இந்தியாவோ 20 இலட்சத்துக்கும் குறைந்த பேல்களுக்குத் தேவையான சணலையே அறுவடை செய்கிறது. ஆனால் அதன் சணல் ஆலைகளுக்கு எப்போதும் வேலை கொடுப்பதற்கு இன்னும் 50 இலட்சம் பேல்கள் தேவையாயிருக்கின்றன. எனவேதான், இந்தியாவுடன் பாக்கிஸ்தான் கடுமையான பேரம் செய்யக்கூடிய நிலையில் இருக்கிறது. பாக்கிஸ்தானின் பொருளாதாரத்துக்குக் கிழக்கு வங்காளம் ஒரு அரண்போல் அமைந்திருக்கிறது.

பருத்தி, கோதுமை ஆகிய இரண்டிலும் இதே நிலைதான். பம்பாயில் இருக்கின்ற மில்களுக்குப் பஞ்சு (பருத்தி) வேண்டும். இந்தியா முழுதுக்கும் கோதுமை வேண்டும். குறிப்பாகக் கிழக்கு வங்காளத்தில அரிசி குறைவாக விளைவதால் அந்த மாகாணத்துக்குக் கோதுமை வேண்டும்.

பாக்கிஸ்தானின் பொருளாதாரத்தில் காணப்படுகின்ற குறைபாடு என்னவென்றால், பண்டைக்கால தொழில் முறைகளைத் தவிர, புதியதாக ஒன்

றுமே அந்த நாட்டில் இல்லை. தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாத நிலக்கரியும் இரும்பும் அங்கே கிடைக்கவில்லை. கிடைக்கக் கூடிய ஏராளமான தண்ணீரின் உதவியால் விரைவில் மின்சார சக்தியை உற்பத்தி செய்யக் கூடும். ஆனால் அதற்குப் பல வருடங்கள் செல்லவேண்டும். பெரிய அளவில் தொழில்களை நிறுவ வேண்டுமென்று பாக்கிஸ்தான் பெருமுயற்சி செய்து வருகின்றது. அரசியல் ஆதிக்கம் இல்லாத வரையில் அந்நிய நாட்டு மூலதனம் தமது நாட்டிலே வரவேற்கப்படும் என்று பாக்கிஸ்தான் நிதி மந்திரி ஜனுப் குலாம் முகம்மது கூறியுள்ளார். மொத்த மூலதனத்தில் 50 சதவிகிதம் உள் நாட்டிலிருந்து வரவேண்டுமென்று இந்தியா கூறுகின்றபோது, 30 சத விகிதமே போதுமென்று பாக்கிஸ்தான் திருப்தியடைகின்றது!

பாக்கிஸ்தானில் தங்களின் மூலதனங்களை ஈடுபடுத்த அந்நிய நாடுகள் அதிகமாக முன்வரவில்லை என்று பாக்கிஸ்தானிகள் புகார் கூறுகின்றனர். ஆனால் இதற்கு என்ன காரணம் என்பதை அவர்கள் மறந்து விடுகின்றனர். புதிய தொழில்களுக்காகப் புதிய இயந்திரங்கள் வேண்டுமென்று கேட்பதில் பாக்கிஸ்தான் பிந்திக்கொண்டு விட்டது. இந்தியாவில் மூலதனங்களை ஈடுபடுத்துகிறவர்களுக்கு நல்ல இலாபம் கிடைக்குமென்ற நம்பிக்கையிருக்கிறது. இந்தியா விதிக்கின்ற வரி விகிதமும் குறைவாகவே இருக்கிறது. மேற்குப் பாகிஸ்தானில் மின்சார வசதி குறைவாக இருப்பதால் அங்கே பெரிய அளவில் தொழிற்சாலைகளைத் தோற்றுவிக்க சாதகமான சூழ்நிலை ஏற்படவில்லை. அந்நிய நாட்டு முதலீடுகளின் பேரில் பாக்கிஸ்தானிகளுக்கு இருந்த அவநம்பிக்கை அண்மையில்தான் நீங்கியது. அதுவும் தேவைக்குப் போதிய பணம் தங்களிடம் இல்லாத உண்மையை உணர்ந்த பின்பே இந்த மனமாற்றம் ஏற்பட்டிருக்கிறது.

எனினும் மற்ற நாடுகள் அனைத்தும் சேர்ந்து பாக்கிஸ்தானில் ஈடுபடுத்தியுள்ள மூலதனத்தைவிட பிரிட்டிஷ் மூலதனம் அதிகமாகவே பாக்கிஸ்தானுக்குக் கிடைத்திருக்கிறது. அந்த மூலதனம் அனைத்தும் உறுதியான தொழில்களின் மீதே ஈடுபடுத்தப்பட்டுள்ளன. கராச்சித் துறைமுகம் ஒவ்வொரு நாளும் பம்பாய்க்குப் போட்டித் துறைமுகமாக வளர்ந்து கொண்டிருக்கிறது. ஆனால் கிழக்கு வங்கத்தில் விளைகின்ற சணலுக்கும் தேயிலைக்கும் இயற்கைத் துறைமுகமாக விளங்குகின்ற சிட்டகாங் நகரம் கராச்சியைப்போல் வேகமாக வளரவில்லை. கல்கத்தாவுக்குச் செல்லுகின்ற சரக்குகளையெல்லாம் ஏற்றுமதி செய்யக்கூடிய அந்த சிட்டகாங் துறைமுகத்தை நவீன முறையில் நிர்மாணிப்பதற்கு வேண்டிய நல்ல திட்டங்களெல்லாம் இருக்கின்றன.



ஆனால் அவைகளுள் அநேக திட்டங்கள் அமல் நடத்தப்படாமல் ஏட்டளவிலேயே இருக்கின்றன.

இன்று இந்தியாவையும் பாக்கிஸ்தானையும் அதிகமாகப் பாதித்து வருவது அவ்விரு நாடுகளுக்குமிடையே காணப்படுகின்ற பொருளாதார வேற்றுமைகள். இவைகளைப் போக்குவதற்காக எத்தனையோ மாநாடுகள் கூட்டப்பெற்றன. ஆனால் நடைமுறையில் எந்த விதமான பயனும் காண்பது கடினமாகிவிட்டது. இந்தியாவும் பாக்கிஸ்தானும் தங்களின் பொருள்களுக்கு வெளி நாட்டு மார்க்கெட்டுகளை எதிர்பார்க்கின்றன. உள் நாட்டுச் சாக்குகளின் போக்குவரவில் தடைகளும் இடையூறுகளும் இல்லா விட்டால் குறைந்த விலையில் கிடைக்கக்கூடிய பொருள்களுக்கு இப்போது இரு நாடுகளிலும் பஞ்சம் விளைந்திராது. பரஸ்பர வியாபாரத்தின் இலாபத்தை உணர்ந்து, அரசியல் வேற்றுமைகளை விட்டொழித்தால் இரண்டு நாடுகளும் செழித்தோங்க வழியிருக்கிறது.

தற்காலிகமாகப் பாக்கிஸ்தானுக்கு என்னதான் தொல்லைகளும் இடையூறுகளும் இருந்தாலும், அது ஒரு வன்மையும் வளமும் நிறைந்த நாடாகத் திகழப்போவது திண்ணம். அதன் வெற்றிக்கு ஆதாரமாக வெளிநாடுகளிலுள்ள பாக்கிஸ்தானிகளிடையே ஒரு புத்துணர்ச்சி காணப்படுகிறது. பாக்கிஸ்தானின் இயற்கை வளங்கள், இந்தியாவில் இருப்பவைகளை விடக் குறைவாயிருந்தாலும், விஞ்ஞான முறையில் அவைகளைப் பயன்படுத்தும்பட்சத்தில், இலாபமுள்ள சிறந்த தொழிற்சாலைகளை அமைப்பதற்கு அவைகளே போதும். இந்தத் துறையில் இன்னும் பல முன்னேற்றங்களைக் காண்பதற்கு வழியிருக்கிறது. அபிவிருத்திக்கு வேண்டிய வழிகளைக் கண்டுபிடிப்பதற்கு விடா முயற்சியும் அதிக உழைப்பும் தேவை.



# அமெரிக்காவின் பொருள்வளம்

★

## அமெரிக்காவில் எவ்வளவு பணம் இருக்கிறது?

ஐக்கிய அமெரிக்காவின் பொருளாதாரப் புள்ளி விபரங்கள் பிரம்மாண்டமானதாயிருக்கின்றன. சென்ற ஒன்று அல்லது இரண்டு வருட காலத்தில் துருக்கி நாட்டுக்கு 25 கோடி டாலர்கள் மதிப்புள்ள சரக்குகளையும் பணத்தையும் அது கொடுத்திருக்கிறது. கிரீசுக்கு 50 கோடி டாலரும், சீனாவுக்கு 75 கோடி டாலரும் கொடுத்திருக்கிறது. பிரிட்டனுக்கு 75 கோடி டாலர் கொடுத்திருக்கிறது. இவை தவிர, மார்ஷல் உதவித் திட்டத்தின் பெயரால் மேற்கு ஐரோப்பாவுக்கு 500 கோடி டாலர்களை அள்ளிக் கொடுத்திருக்கிறது. இதில் 100 கோடி டாலர்கள் மதிப்புள்ள உணவுப் பொருள்களும்—ரொட்டியும் தானியங்களும்—50 கோடி மதிப்புள்ள பருத்தியும, 33 கோடிக்கு பெட்ரோலியமும், 25 கோடி டாலர் மதிப்புள்ள நிலக்கரியும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்தப் பொருள்களிற் பல, கனடா போன்ற வேறுபலநாடுகளில் வாங்கியவைகளாயினும், ஐரோப்பிய சீரமைப்புத் திட்டப்படி ஐக்கிய அமெரிக்காதான் முக்கியமான ஏற்றுமதி நாடாக மதிக்கப்படும்.

இன்னும் 4 வருட காலத்துக்கு 12,000,000,000 (ஆயிரத்து இருநூறு கோடி) டாலர்கள் மதிப்புள்ள உணவுப் பொருள்களையும், இயந்திர சாதனங்களையும் மேற்கு ஐரோப்பாவுக்கு சப்ளை செய்யும் பொறுப்பை அமெரிக்கா ஏற்றுக் கொண்டிருக்கிறது. இதைத் தவிர, ஐரோப்பாவிலும், ஆசியாவிலும் மத்திய தரைப் பிரதேசத்திலும் அது செய்ய வேண்டிய இராணுவச் செலவுகள் இலட்சக் கணக்கான டாலர்கள் என்று சொல்லலாம்.

இது வரையில் அமெரிக்கப் பொருளாதாரம் தனது செலவினங்களைச் சமாளித்துக் கொண்டுதான் வருகிறது. இதற்கு முன் என்றுமே இல்லாத அளவுக்கு அதன் பொருள் வளம் ஓங்கியே வந்திருக்கிறது. வேலையும் தேசிய வருவாயும் குறையாமலே இருக்கின்றன. எனவே அந்நிய நாடுகளுக்குப் பண உதவியோ பொருளுதவியோ செய்வதில் எந்த விதமான கஷ்டமும் தெரியவில்லை. அமெரிக்காவின் பொருள் வளம் உண்மையில் வளர்ந்து கொண்டுதான் இருக்கிறது.

அமெரிக்காவின் பொருளாதாரம் இரண்டுவித அடிப்படையில் அமைந்திருக்கிறது. ஒன்று, உழைப்பால் கிடைக்கின்ற உற்பத்திப் பொருள்கள். மற்றொன்று, இயற்கைப் பொருள் வளங்கள்.

அமெரிக்கப் பொருளாதாரத்தில் மூன்று உண்மைகள் பொதிந்திருக்கின்றன.

(1) அதன் மிதமிஞ்சிய உற்பத்தி. (2) அதன் உற்பத்தியில் காணப்படுகின்ற வேகமும் உற்பத்தியைப் பெருக்கும் சாதனமும். (3) இடைவிடாத வளர்ச்சியும் முன்னேற்றமும்.

தொழில் துறையில் அமெரிக்கா பெற்றுள்ள பொருளாதார முன்னேற்றத்துக்கு ஈடாக உலக வரலாற்றிலேயே இதற்கு முன் எந்த நாடும் இருந்ததில்லை. உலக ஜனத்தொகையில் பதினைந்தில் ஒரு பகுதியினராகவே அமெரிக்கர்கள் இருக்கின்றனர். அவர்கள் வாழ்கின்ற நிலப்பரப்பும் உலகத்தில் பதினைந்தில் ஒரு பாகமாகவே இருக்கின்றது. ஆனால் உலக முழுதும் உற்பத்திச் செய்யப்படுகின்ற பொருள்களில் 60 சதவிகிதம் அமெரிக்காவிலேயே கிடைக்கின்றது. அதாவது, 186 கோடி மக்களும் சேர்ந்து உற்பத்தி செய்கின்ற பொருள்களைவிட அதிகமாகவே 14 கோடி மக்கள் உற்பத்திச் செய்கின்றனர்! (உலகத்தின் மொத்த ஜனத்தொகை 200 கோடி. ஐக்கிய அமெரிக்காவின் ஜனத்தொகை 14 கோடி) தொழில் துறையிலும் விவசாயத்திலும் இடைவிடாத முன்னேற்றமே அமெரிக்காவில் இருந்து கொண்டிருக்கிறது. வயல்களில் புதிய முறைகள் கையாளப்படுகின்றன. ஆலைகளிலும் புதிது புதிதான பொறிகள் கண்டுபிடிக்கப்பட்டு உற்பத்தியின் வேகம் அதிகரித்து வருகிறது. விஞ்ஞானிகளும் தொழில் நிபுணர்களும் நாட்டின் பொருளாதாரத்தைப் பெருக்கும் பொருட்டு புதிய புதிய பரிசோதனைகளை விஞ்ஞான ஆராய்ச்சிக் கூடங்களில் இடைவிடாமல் நடத்திக்கொண்டிருக்கின்றனர். பிளாஸ்டிக், நைலோன் போன்ற பல புதிய பொருள்களையும் அவர்கள் கண்டு பிடித்து வருகின்றார்கள்.

1948—ம் ஆண்டிலே 256,000,000,000 டாலர்கள் மதிப்புள்ள பொருள்கள் அமெரிக்காவில் உற்பத்தியாகியுள்ளன. 10 வருடத்துக்கு முன்பு இங்கே உற்பத்தியான பொருள்களைப்போல் மூன்று பங்கு அதிகமாகயிருக்கின்றது. இந்தப் பொருள்வளம் நாட்டின் பலதிற பக்களிடையேயும் பரவியுள்ளது.

சென்ற 12 வருடகாலத்தில் தொழிலாளிகளின் சம்பள விகிதம் இரண்டு மடங்காகப் பெருகியிருக்கிறது. இத்துணை உயர்ந்த சம்பளம் உலகிலே வேறு எந்த நாட்டிலும் கிடையாது. 1936-ம்

ஆண்டில் ஒரு தொழிலாளியின் சராசரி வருட வருமானம் 1,133 டாலர்களாகவே இருந்தது. அல்லது வார வருமானம் 22 டாலர்களுக்குச் சற்றுக் குறைவாகவே இருந்தது. ஆனால் இன்று வருட வருமானம் 2,800 டாலர்களாகவும், வார வருமானம் 59 டாலர்களாகவும் உயர்ந்திருக்கின்றன! இந்த இடைக் காலத்தில் விலைவாசிகளெல்லாம் 75 சதவிகிதம் உயர்ந்துவிட்டது உண்மைதான். எனினும் சென்ற இரண்டாவது உலகப் போருக்கு முன்பு இருந்ததைவிட இன்று தொழிலாளியின் 'வாங்கும் சக்தி' (Purchasing Power) சுமார் ஒன்றரைப் பங்கு அதிகரித்திருக்கிறது. ஏனைய மக்களைப் போலவே ஒரு அமெரிக்கத் தொழிலாளியும் பாங்கியில் பணம் போட்டுவைத்திருக்கிறான். 1947-ம் ஆண்டில் 880 கோடி டாலர்களை அமெரிக்க மக்கள் மிச்சப்படுத்தினார்கள். 1948-ம் ஆண்டிலே இன்னும் அதிகமாக 400 கோடி டாலர்கள் சேர்ந்துவிட்டன.

காலஞ்சென்ற அமெரிக்க ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டும் ருஷ்ய ஸ்டாலினும் யால்டாவில் சந்தித்தபோது, அவ்விருவருக்குமிடையே நடந்த ஒரு ருசிகரமான உரையாடலைப்பற்றிய கதையொன்று சொல்லப்படுகிறது. அதாவது, ஒரு அமெரிக்கத் தொழிலாளியின் வருமானத்தைப்பற்றி ஸ்டாலின் அறிய விரும்பினார்.

"ஒரு அமெரிக்கத் தொழிலாளியின் மாத வருமானம் சுமார் 240 டாலர்கள்" என்று ரூஸ்வெல்ட் கூறினார்.

"அவனுடைய உயிர் வாழ்க்கைக்குத் தேவையானது எத்தனை டாலர்?" என்று கேட்டார் ஸ்டாலின்.

"சுமார் 200 டாலர்களே" என்று மறுமொழி பகர்ந்தார் அமெரிக்க ஜனாதிபதி.

"அப்படியானால் மிச்சப்படுகின்ற 40 டாலர்களை அவன் என்ன செய்கிறான்?"

இதை அறிய விரும்பினார் ஸ்டாலின்.

"மிச்சப்படுகின்ற டாலர்களை வைத்துக்கொண்டு அவன் என்ன செய்கின்றான் என்பது பற்றி எனக்குக் கவலையில்லை" என்றார் ஜனாதிபதி.

ஒரு ருஷ்யத் தொழிலாளியின் வருமானம் எவ்வளவென்று ரூஸ்வெல்ட் கேட்டார். அவன் மாதமொன்றுக்கு 800 ரூபிள்கள் சம்பாதிப்பதாக ஸ்டாலின் பதிலளித்தார். "அவனுடைய உயிர் வாழ்க்கைக்குத் தேவையான ரூபிள்கள் எத்தனை?" என்று ரூஸ்வெல்ட் கேட்டார். 1000 ரூபிள்கள் என்றார் ஸ்டாலின்!

"அப்படியானால் இன்னும் 200 ரூபிள்கள் அவனுக்கு எங்கிருந்து கிடைக்கின்றன?" என்று கேட்டார் ரூஸ்வெல்ட்.

"அது அவனுடைய வேலை. எனக்கு அதைப்பற்றிக் கவலையில்லை!" என்றார் ஸ்டாலின்!



**கடமையில் கருத்தும் பொறுப்புணர்ச்சியுமுள்ள கலீபா உமர் (ரலி) அவர்களின் வாழ்க்கையில் ஒரு வியக்கத்தக்க நிகழ்ச்சி.**

# கடமையில் தவரு காவலன்

"நூர்"

இதன் கீழே தரப்படும் விஷயம் மிகப் பழமையானதும், ஆனால் உண்மையில் நிகழ்ந்ததுமான ஓர் உருக்கமான சம்பவமாகும். அக்காலத்தில் இஸ்லாம் அத்துணைப் பெருமையுடனும் சிறப்புடனும் சரித்திரப் புகழுடனும் விளங்கியதன் காரணத்தை இஃது எடுத்துக்காட்டுகின்றது.

சுமார் 1300 ஆண்டுகளுக்கு முன், இஸ்லாம் தனது சரித்திரத்தின் ஒளி பொருந்திய அத்தியாயத்தை வரைந்து கொண்டிருந்த காலம். இயேசு பெருமான் அவர்கள் தவங்கிடந்து கோரி நின்ற சுவனபூமி அக்காலத்தில் உண்மையிலேயே உதயமாகியிருந்தது. புஜபல பராக்கிரமம் நிறைந்த மக்களெல்லாம் அப்பொழுது ஆண்டவனுக்கு அஞ்சி அவனது அடிபணிந்து நற்கரும நற்செய்கைகளில் ஈடுபட்டிருந்தனர். இத்தகைய மகோன்னத சந்தர்ப்பத்திலேதான் கட்டுக் கதையையும் தோற்கடிக்கவல்ல சரித்திரச் சம்பவமொன்று உண்மையிலேயே நிகழுகின்றது.

பாலைவனப் பிரதேசமான மணல் வெளி நிறைந்த அரேபியாவில் ஒரு நாள் மத்தியான்னம்; பகற் பன்னிரண்டுமணி நேரம்; உச்சி வேளைச் சூரியன் மிக உக்கிரத்துடன் எரிகின்றது; கோடைகாலச் சூரியக் கிரணங்கள் கொடூரமாய் வீசுகின்றன. மனிதர்களும், பறவைகளும், விலங்கினங்களும் அவ் வெப்பத்தைத் தாங்க முடியாது எங்கேனுந் தங்கிச் செல்ல நிழல்தரும் ஒதுக்கிடங் கிடைக்குமாவெனத் தேடியொதுங்குகின்றனர்; வெளியே தலைநீட்ட அஞ்சி அவரவர் இருப்பிடத்திலேயே அமர்ந்துள்ளனர்.

அத்தகைய கடும் வெய்யிலில் ஓர் ஒற்றை மனிதர் தன்னந் தனியாகக் கவலை தோய்ந்த முகத்துடனும் பரபரப்புடனும் தன்னுடைய உடைகளை வாரிச் சுருட்டி மடக்கிக் கட்டிக்கொண்டும், தனக்கு மிகப் பிரியமான ஏதோ ஒரு பொருளை இழந்து அதனைத் தேடியலைபவரே போன்று சற்றுமுன் ஒரு திசையிலும், அதன் பின்னர் இன்னொரு திசையிலும், அதற்கப்பால் வேறொரு திசையிலுமாக சுற்றித் திரிகின்றார்.

இம் மனிதர் யார்? கிரேட் பிரிட்டன், பிரான்ஸ், ஜெர்மானி,

ஆகிய மூன்று தேசங்களையும் ஒன்றாக இணைத்துப் பார்த்த போதினும் அதைவிடப் பெரிய சாம்ராஜ்யத்தை ஒரு குடையின் கீழ் ஆண்ட ஒப்பற்ற இஸ்லாமிய அதிபர் இவரே! உரோம ராஜ்யத்தைத் சேர்ந்த வீஸர்களின் இருமாப்பையும், பாரஸீக நாட்டைச் சேர்ந்த சாஸ்ரோக்களின் பகட்டையும் இந்த இஸ்லாமியச் சக்ராதிபதியின் சேனை வீரர்களே தங்கள் காலின் கீழே போட்டு மிதித்துத் தொலைத்தனர். இம் மன்னரின் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே இம் மண்ணுலகின் மாபெரும் மண்டலாதிபதிகளெல்லாம் மனமொடிந்துவிடுவர். இவர்களே உமர் (ரலி) என்னும் இஸ்லாத்தின் மாபெரும் இரண்டாவது கலீபா ஆவார்கள்!

நரகம்போன்று நெருப்பைக் கக்கும் அக் கொடும் வெய்யிலில் கலீபா அவர்கள் அவ்வாறு எதைத் தேடியலைகின்றார்கள்? பைத்துல்மால் என்னும் பொதுச் சொத்தைச் சேர்ந்த ஒட்டகமொன்று அறுத்துக்கொண்டு எங்கோ ஓடிவிட்டது. பொதுநிதிப் பாதுகாவலர் என்ற வகையில் அம் மிருகத்தைக் கண்டுபிடித்துக்கொண்டு வருவது தனது கடமையென உமர் (ரலி) அவர்கள் உணர்ந்தார்கள். காணாமற் போன அவ் வொட்டகைக்காக ஆண்டவனுக்கும் மனிதர்களுக்கும் பதில் சொல்லக் கடமைபட்டவர், தான் மட்டுமே என்று கலீபா அவர்கள் கருதினார்கள். தகிக்கும் சூரியனோ, கொதிக்கும் உஷ்ணமோ இக் கடமையினின்றும் அவர்களைப் பின் வாங்கச் செய்ய முடியவில்லை.

கடமையே ஒரு முஸ்லிமுக்கு யாவற்றினும் மிகப் பெரிது. "முதலிற் கடமை; பிறகே சுகம்" என்பதே ஒவ்வொரு முஸ்லிம் ஆண் பெண்ணினுடையவும் தாரக மந்திரமாயமைந்துள்ளது. கடமையின் கூப்பாடு காதில் வீழ்ந்தவுடனே ஒரு முஸ்லிம் தன்னுடைய சொந்த சுகதுக்கங்களையெல்லாம் உதறித் தூரத் தள்ளிவிட்டு ஓய்வோ அயர்வோ ஒரு சிறிதுமின்றி முழுமுயற்சியுடன் காரியத்திலிறங்கி விடுகிறான். அக் காரியம் வெற்றி பெறும்வரை அதில் முழு மனத்துடன் ஈடுபட்டு விடுகின்றான். அத்தகைய இஸ்லாமிய உத்தமப் புதல்வர்களில் ஒருவரே உமர் (ரலி) அவர்கள். மக்களின் மன்னரான போதினும் தன்னை அவர்கள் மக்களின் ஊழியராகவே மதித்துக்கொண்டார்கள். குடிகளின் சேவகராக ஊழியம் புரிவதில் அவர்கள் சிறிதும் சங்கோஜமடைந்ததில்லை. எனவே, திசை தப்பிச் சென்ற ஒட்டகத்தைத் தேடிப் பிடித்து மீண்டும் பைத்துல்மாலில் கொண்டுவந்து சேர்க்கக் கலீபா அவர்கள் வெளியில் புறப்பட்டு விட்டார்கள்.

புறப்படுந் தருவாயில் அஹ்னப் என்பவரின் தலைமையின் கீழ் சில பெரிய மனிதர்கள் கலீபா அவர்களைக் கண்டு கொள்ள வந்தனர். உமர் (ரலி) அவர்கள் காணாமற்போன ஒட்டகத்தைத் தேடச் செல்வதையறிந்து, அவர்கள் ஆச்சர்யத்தில் மூழ்கினர். மாபெரும் மன்னரொருவர் கேவலம் ஓர் ஒட்டகத்திற்காக இத்துணைக் கவலையடைவதாவென்று அவர்கள் வியப்படைந்தனர். உண்மையில் இஃது ஓர் ஒட்டகத்தைமட்டும் பற்றிய விஷயமன்று. காவலரின் கடமை என்பதே இதில் கவனத்திற்குரியதாகிவிட்டது.

பைத்துல்மால் என்னும் பொதுச் சொத்து நன்கு பராமரிக்கப்படுகின்றதாவென்றுமேற்பார்வையிடுவதில் உமர் (ரலி) அவர்களுக்கு ஒரு கடமையுள்ளது. கடமையைக் காப்பதென்பது ஒரு முஸ்லிமுடைய பிரதானச் சின்னமாகும். கலீபா அவர்கள் அங்கிருந்த அஹ்னப் அவர்களை நோக்கி, "இந்த ஓர் ஒட்டகம் எத்தனை எளிய மக்களுக்கு உரியது என்பதை நீர் அறிவீரா?" என வினவினார்கள். அதற்கு அஹ்னப், "இதைத் தேடிப் பிடிக்க யாரேனும் ஒரு ஊழியரை அனுப்பலாமே!" என்று யோசனை கூறினார். அதற்குக் கலீபா அவர்கள் எத்தகைய பதிலைக் கூறினார்கள் தெரியுமா?

இந்தியாவில் முதன் முதலில் மாகாண ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட காங்கிரஸ் மந்திரிகளுக்கு மஹாத்மா காந்தியவர்கள் கூறிய புத்திமதிகளை இத் தருவாயில் நாம் ஞாபகப்படுத்திக் கொள்ளுவது இன்றியமையாததாகும். 13 நூற்றாண்டுகளுக்கு முன் அரசு புரிந்த இஸ்லாமியக் குடியரசின் இரண்டாவது கலீபாவான உமர் (ரலி) அவர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி ஆட்சி செலுத்துமாறு இந்த 20-வது நூற்றாண்டு ஜனநாயக மந்திரிகளுக்கு காந்திஜியவர்கள் அறிவுபுகட்டினார்கள் என்றால், இக் கலீபா அவர்களின் ஆட்சிப்பெருமையை என்னென்றியம்புவது!

அஹ்னபின் யோசனைக்குக் கலீபா அவர்கள், "எல்லா முஸ்லிம்களைப்போலவே நானும் இஸ்லாமியக் குடியரசின் ஓர் ஊழியனல்லவா? பைத்துல்மாலுக்கு நான் மட்டுமே பொறுப்பாளி. அதைக்கட்டிக் காப்பது எனது கடமையே! என்னுடைய கடமையை நான் ஏன் இன்னொருவர் மீது சுமத்த வேண்டும்? ஒவ்வொருவரும் அவரவர் சுமையைச் சுமந்தாகவேண்டியதே! மேலும் என்னினும் பெரிய ஊழியர் வேறு எவருளர்?" என்று பதிலளித்தார்கள்.

அக்கால இஸ்லாம் அத்துணைச் சீருடனும் சிறப்புடனும் விளங்கியதன் காரணம் யாது? அன்றைய முஸ்லிம்களுக்கு அப்பொழுதிருந்த அதிகாரத்தையும் செல்வாக்கையும் கௌரவத்தையும் ஒரு சிறிதும் பொருட்படுத்தாது கடமையை நிறைவேற்றுவதில் கண்ணுங் கருத்துமாயிருந்து அவர்கள் பணிவுடன் செயலாற்றிவந்தனர். அவர்களின் தூய ஒழுக்கம், இருதய பரிசுத்தம், ஆகியவைகளே அவர்களை உலகப் பெருமைக்கு உயர்த்தியது.

***இந்தியாவையும் பாக்கிஸ்தானையும் மீண்டும் ஒரே நாடாக இணைக்க வேண்டுமென்று பிடிவாதம் செய்கின்ற ' அகண்ட ஹிந்துஸ்தான் ' வாதிகளுக்கு, ' ஹிந்து 'வின் குடியரசு மலரில் இலண்டன் பார்லிமெண்ட் மெம்பர் மேஜர் உட்ரோ வியாட் கூறும் யோசனை,***

# சவர்க்கார்களின் சிந்தனைக்கு

மேஜர் உட்ரோ வியாட்

## அயர்லாந்துப் பிரிவினை

**நா**ட்டுப் பிரிவினை என்பது எப்போதும் அதிருப்தியைத் தரக்கூடியதுதான். மிகச் சிறிய தேசமாகிய அயர்லாந்து, வட அயர்லாந்து என்றும் தென் அயர்லாந்து என்றும் பிரிக்கப்பட்டு, வட அயர்லாந்து இன்னமும் கிரேட் பிரிட்டனுடன் ஒரு அங்கமாக ஒட்டிக் கொண்டிருப்பது நியாயந்தான் என்று தென் அயர்லாந்து மக்கள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். அதே மாதிரி, வட அயர்லாந்தின் மக்களும் பிரிவினை நீடிப்பதையே பிடிவாதமாக விரும்புகின்றார்கள். அயர்லாந்தை மீண்டும் ஒன்றுபடுத்த எடுத்துக் கொள்ளப்படுகின்ற எந்தவிதமான முயற்சியையும் ஆயுதங்கொண்டு எதிர்ப்போம் என்று அவர்கள் ஆர்ப்பாட்டம் செய்கின்றார்கள்.

இங்கிலாந்தின் ஒவ்வொரு தொகுதியிலும் சில ஐரிஷ்காரர்கள் இருக்கின்றார்கள். பிரிவினையை எதிர்க்கின்றவர்களே அரசியலில் அதிக அக்கரையுடையவர்களாகயிருக்கின்றனர். அரசியல் கூட்டங்களுக்குச் சென்று, தவறாமல் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்துக் கொள்ளுகிறவர்களும் அவர்களே. அயர்லாந்துப் பிரிவினையை உடனே ரத்து செய்ய வேண்டுமென்று கோருகிறவர்களின் வாயை அடக்க நான் கண்டு பிடித்துள்ள ஒரே வழி இதுதான்.

"வட அயர்லாந்தைக் கைக்கழுவி விட்டதாகப் பிரிட்டிஷ் அரசாங்கம் இப்பொழுது பிரகடனம் செய்தால், அயர்லாந்துக் குடியரசு உடனே அதை (வட அயர்லாந்தை) தன்னுடன் சேர்த்துக் கொள்ளும். ஆனால் அதைத் தொடர்ந்து ஒரு பெரிய இரத்த ஆறு ஓடாதா?" என்று நான் அவர்களைக் கேட்பேன்.

இதற்கு என்ன பதில் கூறுவார்கள்? உண்மையில் ஏராளமான இரத்தம் சிந்தப்படும். எனவே, பலாத்காரத்தால் மீண்டும் ஒன்றுபடுத்துவதை விடுத்து, இரு பிரிவினரும் மனமிசைந்து ஒன்றுபடுங்காலம் வருகின்ற வரையில் காத்திருப்பதே நலம் என்று அந்த ஐரிஷ் மக்களுக்கு நான் அறிவுறுத்துவதுண்டு.

## பாக்கிஸ்தான் ஏற்படாமலிருந்தால் என்ன நடந்திருக்கும்?

இதே மாதிரி அயர்லாந்தில் மட்டுமின்றி. மற்ற நாடுகளிலும் பிரிவினை என்பது இரண்டு தீமைகளுள் குறைந்த தீமையாகவே இருக்கிறது. பிரச்னையைத் தீர்ப்பதற்கு அந்தப் பிரிவினை ஒரு சரியான வழி அல்லவென்பது உண்மைதான். ஏனெனில், அதனால் பலவித நிர்வாகத் தொல்லைகள் தோன்றுகின்றன. ஆனால் பிரிவினையை எதிர்க்கு முன், அதற்கு மாறாக நடக்கப் போவது என்னவென்பதை சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

பஞ்சாபில் ஆயிரக் கணக்கான படுகொலைகள் நிகழ்ந்தன. பதினாயிரக்கணக்கான மக்கள் தங்கள் வீடுகளை விட்டு ஓடினார்கள். இவ்வளவும் பிரிவினையின் நேரடியான விளைவுகள். ஆனால் பிரிவினை இல்லா விட்டால் பஞ்சாபிலே அமைதி நிலவுமா? கலகம் அத்துணை விரைவில் தோன்றாமல் இருக்கலாம். ஆனால் அது தோன்றி விட்டால் அதனை அடக்குவது—அறவே முடியாத காரிய மல்லவாயினும்—மிகவுங் கடினமாகிவிடும். ஒழுங்கையும் சட்டத்தையும் நிலைநாட்டக் கூடிய பொறுப்புள்ள நல்ல மனிதர்கள் யாரும்அங்கே இருக்கமாட்டார்கள். அந்தக் கலகத்தை முஸ்லிம்கள் தங்களின் புனித யுத்தமாகவே கருதியிருப்பார்கள். கல்கத்தாவிலும் வங்காளத்திலும் தோன்றிய கலகத்தை அடக்குவதற்கு சுஹ்ரவர்தி முதலிய முஸ்லிம் தலைவர்களின் ஆதரவை மகாத்மா பெற்றிருக்க முடியாது. ஆனால், அதற்கு மாறாகக் கலகத்தைத் தூண்டிவிடவும், தூபம் போடவும் அந்த முஸ்லிம் தலைவர்கள் முனைந்திருப்பார்கள். பிரிவினைக்குப் பின்பு தோன்றிய கலகம், பிரிவினைக்கு முன்பே தோன்றியிருந்தால், ஒரு சில இடங்களுடன் அக்கலகம் நின்றிராது. அதில் அநேகமாக எல்லா முஸ்லிம்களுமே போருக்குக் கிளம்பியிருப்பார்கள். அப்போது படுகொலைகள் மிகப் பெரிய அளவிலேயே நடந்திருக்கும். அது இன்னமுங்கூட நடந்து கொண்டுதானிருக்கும்.

இரு சாராரும் எப்படியாவது பிரிந்தே தீரவேண்டும் என்ற அளவுக்கு அவர்களின் விரோத உணர்ச்சி உச்ச நிலைக்கு வந்து விட்டது. ஹிந்து-முஸ்லிம் சச்சரவு உடனடியாகத் தீர்க்கப்படுவதற்குப் பிரிவினை ஒரு தற்காலிக யோசனைதான். காளடைவில் இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே நல்லுறவும் நேசப்பான்மையும் நிலைபெறும்போது பிரிவினைக்கு இப்போது இருக்கின்ற முக்கியத்துவம் கொஞ்சங் கொஞ்சமாகக் குறைந்து கொண்டே வரத் தொடங்கிவிடும்.

ஆனால் சுதந்தரம் கிடைத்த பிறகு, அந்த இந்து—முஸ்லிம் உறவில் என்ன முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது?

## வேற்றுமை வளருகிறது

ஆனால் சில சமயங்களில் அந்த உறவு முறை மிகவும் மோசமாகிக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. உதாரணமாக, பாக்கிஸ்தானைப் பற்றிப் பண்டித நேரு அவர்கள் இலண்டனில் சில வாரங்களுக்கு முன் பேசியபோது, இரு நாடுகளுக்குமிடையே நட்பு வளருவதாகப் பிரிட்டிஷ்காரர்களுக்குத் தோன்றவில்லை. வருந்தத் தக்க காஷ்மீர் தகராறு இன்னமும் வளர்ந்து கொண்டே இருக்கிறது. பஞ்சாப் ஆற்று நீரைப்பற்றிய வாதப் பிரதிவாதங்களுக்கு இன்னமும் ஒரு முடிவு காணப்படவில்லை. இரு நாடுகளுக்கிடையே மனக்கசப்பும் சந்தேகமும் வளர்ந்து கொண்டிருப்பதாகவே தெரிகிறது.

## அச்சமும் அவநம்பிக்கையும்

இந்தப் பயங்கரமான கதையில் மற்றொரு உண்மையும் இருக்கிறது. முஸ்லிம் மக்களிடையே முஸ்லிம் லீக் பெற்றிருந்த செல்வாக்கிற்கு முஸ்லிம்களின் அச்சமும் அவநம்பிக்கையுமே அடிப்படைக் காரணம், ஒன்றுபட்ட

இந்தியாவில் முஸ்லிம்கள் இருந்தால், அரசாங்கத்தின் சிறந்த உத்தியோகங்களிலிருந்து அவர்கள் அகற்றப்பட்டு விடுவார்கள் என்று உண்மையாகவே அஞ்சினார்கள். விவசாயத்திலும் தொழில் துறையிலும் நசித்துப் போகவேண்டியிருக்கும் என்று அவர்கள் நம்பினார்கள். எண்ணிக்கையில் அதிகமாகவுள்ள எதிரிகளின் ஆதிக்கத்துக்குத் தாங்கள் ஆளாகவேண்டியிருக்குமென்று அவர்கள் அறிந்திருந்தார்கள். 'பாதுகாப்பு இல்லையே' என்ற உணர்ச்சி யாருக்கு இருந்தாலும் அது பலாத்காரத்தையும் வெறுப்புணர்ச்சியையும் நிச்சயமாக வளர்க்கும். இத்தகைய சூழ்நிலையை நாட்டுப் பிரிவினை நிச்சயமாகப் போக்கிவிட்டது. இப்போது பாக்கிஸ்தானிகள் அதிகத் தன்னம்பிக்கையுடையவர்களாகவும், தங்கள் காரியங்களைத் தாங்களே கவனித்துக்கொள்ளும் திறமை மிக்கவர்களாகவும் ஆகிவிட்டார்கள்.

அது ஒரு நல்ல அறிகுறிதான். தன்னம்பிக்கையும் பாதுகாப்புமுள்ள ஒரு மனிதனே அண்டையிலுள்ளவர்களுடன் உறவு முறையில் வாழ விரும்புவான். ஆனால் இந்தியத் துணைக்கண்டத்தில் இருக்கின்ற இரண்டு நாடுகளுக்குள்ளே இந்தியா அளவற்ற பலம் பொருந்தியதென்பதை இந்த நாடு உணரவேண்டுவது மிக முக்கியம். தனக்குச் சரி என்று தோன்றுகின்ற வழியில் அது நடந்துகொண்டால் மட்டும் போதாது. இந்தியா, தனது வழி நியாயமானதென்பதைப் பாக்கிஸ்தானும் உணரும்படி நடந்துகொள்ளவேண்டும்.

பாக்கிஸ்தான் தனது சுதந்தரத்துக்கு அபாயம் வந்துவிட்டதாகவோ, அல்லது ஹிந்துக்களின் ஆக்கிரமிப்புக்குத் தான் ஆளாக்கப்படுவதாகவோ அது நினைத்தால், அதன் காரணமாகப் பாக்கிஸ்தானின் அச்சமும் அவநம்பிக்கையுமே வளரும். அதன் விளைவாக விரோதமும் குரோதமும் அதிகரிக்கும்.

## கஷ்மீரைப்பற்றி அந்நியர் நினைப்பதென்ன?

கஷ்மீரை எடுத்துக்கொள்ளுவோம். வெகுதூரத்தில் இருப்பவர்கள் அதன் வெளித் தோற்றத்தைத்தான் பார்க்கின்றார்கள். அதைப்பற்றிய விரிவான விஷயமொன்றும் அந்நிய நாட்டாருக்குத் தெரியாது. ஆனால் இங்கிலாந்தில் இருக்கின்ற எங்களுக்கு அதைப்பற்றி ஒருவிதமாகத் தெரியக்கூடியது இதுதான்:

கஷ்மீர் மகாராஜா இந்தியாவுடன் இணைந்து கொண்டதாக அறிவித்துவிட்டதால், அதனையே ஆதாரமாகக் கொண்டு கஷ்மீர் மீது இந்தியா உரிமை கொண்டாடுகிறது. இது ஒரு வெறும் சட்டப் பிரச்னை என்றே எங்களுக்குத் தோன்றுகிறது. ஏனெனில், இந்திய சர்க்காருக்கு மகாராஜாவின் மீது ஆழ்ந்த வெறுப்பு இருக்கிறது என்பது அனைவருக்கும் தெரியும்.

எந்தக் கட்சியில் நியாயம் இருக்கிறதோ, இல்லையோ, இந்தியாவும் பாக்கிஸ்தானும் கஷ்மீர் விவகாரத்தில் சிக்கிக்கொண்டிருக்கிறது என்பதுமட்டும் உண்மை. ஜனநாயக அடிப்படையில் கஷ்மீர் மக்களிடையே வாக்கெடுப்பு நடத்துவது ஒன்றுதான் இந்தப் பிரச்னை தீருவதற்கு சரியான வழி. இந்த வழியில் செல்ல இந்தியா ஓரளவுக்குத் தயங்குகிறது. கஷ்மீர்மீது இந்தியா தனக்குள்ள உரிமையை முதலில் உறுதிப்படுத்திக் கொள்ள விரும்புகிறது. சர்வஜன வாக்கெடுப்புக்கு அது சம்மதிக்குமுன், அந்த உரிமையை அங்கீகரிக்க வேண்டுமென்று அது வற்புறுத்துகிறது. இது இயல்பாகவே பாக்கிஸ்தானுக்குச் சந்தேகத்தை விளைவிக்கிறது. உண்மையாகவே ஒழுங்கான சர்வஜன வாக்கெடுப்பு நடத்துவதில் இந்தியாவுக்கு நம்பிக்கை இருக்குமாவென்று பாக்கிஸ்தான் சந்தேகப்படுகிறது, இது கரணமாக காஷ்மீர் விஷயம் அனைத்தும் தனது பாதுகாப்புக்கு ஆபத்தாகவே இருப்பதாகப் பாக்கிஸ்தான் கருதுகிறது.

பாக்கிஸ்தானைவிட இந்தியா அதிக பலமுள்ளதாக இருப்பதால், பாக்கிஸ்தானின் அச்சத்தை அகற்றுவதற்காகவேனும், கஷ்மீர் பிரச்னையைக் கூடிய சீக்கிரம் தீர்ப்பதற்கு சர்வஜன வாக்கெடுப்பு நடத்த விரும்புவதாக இந்தியா அறிவிக்கவேண்டும். கஷ்மீர் தகராறில் இன்னும் அதிகமான சங்கடங்கள் இருப்பதை நான் அறிவேன். ஆனால் அவைகள் அத்துணை முக்கியமானவையல்ல.

சட்டத்தில் இருக்கின்ற கொஞ்ச நஞ்ச உரிமைகளையே இந்தியா உறுதியாகப் பிடித்துக்கொண்டிருப்பதைவிட, சலுகைகள் காட்டுவதிலேயே தவறிழைக்க அது எப்போதும் தயாராயிருக்கவேண்டும். தன்னுடைய நடத்தை நாணயமானதென்றும் நல்லெண்ணமுடையதென்றும் நம்புகின்ற ஒரு மனிதன், தன்னைப் பார்த்துப் பிறர் பயப்படுகிறார்கள் என்பதை உணருவது எளிதான காரியமல்ல. நாடுகளுக்கிடையே நல்லுறவும் நேசப் பான்மையும் நிலைபெறுமலிருப்பதற்கு மூலகாரணம் அச்சமே. அந்த அச்சம் என்னதான் அகாரணமானதாயிருந்தாலும், அது வளராமலிருக்கவேண்டுமாயின், நமது பலம் நிதானமாகவும் முன் யோசனையுடனுமே பயன்படுத்தப்படவேண்டும். பாக்கிஸ்தான் தகுந்த பாதுகாப்புடன் இருப்பதாகவும், அது பிறருக்கு அஞ்சவேண்டியதில்லையென்றும் நம்புகின்றகாலத்தில் இரு நாடுகளின் நல்லுறவும் நிச்சயமாக வளரும். இரு சாராருடையவும் விருப்பத்தின்பேரில் அயர்லாந்தின் பிரிவினை பின்னொரு காலத்தில் ஒழியப்போவதுபோல், இந்தியப் பிரிவினையும் நாளைக்கு ஒருநாள் முடிவெய்தக் கூடும்.



## நண்பருக்கு நமது அநுதாபம்

சிறந்த எழுத்தாளரும், எமது அருமை நண்பருமாகிய தூத்துக்குடி, எம். முஸ்தபா ஹுஸைன் அவர்களின் இன்னுயிர்த் தந்தையாகிய ஜனாப் மு. முஹைதீன் ஹுஸைன் சாஹிப் (மானேஜர், ஓ. பி. ஆயில் மில்ஸ், திருமங்கலம்) அவர்கள், சென்ற 17-1-50-ந் தேதியன்று மாரடைப்பால் திடீரென மரணமெய்திய செய்தியறிந்து திடுக்கிட்டுத் துயருற்றோம்.

அருமைத் தந்தையைப் பிரிந்து ஆருத்துயருறும் ஒரே மைந்தராகிய நண்பர் முஸ்தபா ஹுஸைனுக்கு எமது ஆழ்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்ளுவதுடன், இறந்தவரின் ஆன்மா சாந்தியடையுமாறு எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகிறோம்.

—ஆசிரியர்

# உலக சகோதரத்துவம்

ஜே. எம். ஹுஸைன்

## ‘ஒரே உலகம்’

வரலாற்றின் ஒரு சிக்கலான சமயத்தில் நாம் வாழ்கிறோம். மனித இனத்தை அழிக்கத் தோன்றிய இரு அரக்கப் போர்களும் முடிந்துவிட்டன. எண்ணற்ற வீரர்கள் பலியிடப்பட்டனர். கணக்கிட முடியாத பெரு நிதி குண்டுகளாக மாறியது. இரத்த ஆறு ஓடி ஓய்ந்துவிட்டது. எங்கும் குமுறலும் குழப்பமும் நிலவியது. இந்தக் குழப்பத்தைப் போக்கி, புதியதொரு உலகம் அமைக்க வேண்டும் என்பது இன்றைய உலக சிந்தனையாளர்களின் முயற்சி.

அல்லலின் பலனாக அனுபவம் ஏற்படுகிறது என்பது முழு உண்மையே. எதிர்த்து நிற்கும் இன்னல்களைப் போக்க உலகின் பல்வேறு . இனங்களும் ஒன்றையொன்று உரியமுறையில் அறிந்துகொண்டு ஒன்றுபடவேண்டும். அது ‘ஒரே உலகம்’ என்ற எண்ணத்தினால்தான் உருவாக முடியும் என்று பல அரசியல் வாதிகள் கருதுகின்றனர். 1300 ஆண்டுகளுக்கு முன்னர் ‘உம்மி’ நபியால் உலகுக் களிக்கப்பட்ட உயரிய கொள்கைகளை ஆழ்ந்து அறிய, அனுஷ்டிக்க இதுவே உரிய தருணம்.

## சகோதரத்துவம்

இஸ்லாம் மதத்தின் தலைசிறந்த அடிப்படைக் கொள்கைகளில் ஒன்று, அகில உலக சகோதரத்துவம். உலகனைத்தும் படைத்துக் காக்கும் முழுமுதற் கடவுள் ஒருவனே என்று ஒரு முஸ்லிம் நம்புகிறான். உலகின் பல்வேறு பகுதியில் வாழ்ந்த மக்களை நேரிய பாதைக்கு நடத்திச்செல்ல எண்ணற்ற நபிமார்களை அவன் அனுப்பியுள்ளான். அவர்களுள் இறுதிநபி எங்கள் முகம்மது (ஸல்) அவர்கள் என்றும் அவன் நம்புகிறான். இந்த அடிப்படையில்தான் இஸ்லாமிய வாழ்வு ஆரம்பமாவதால் அங்கே எவ்வித சாதி வேறுபாடும், குலப்பெருமையும், குடி உயர்வும், உயர்வு வாழ்வு மனப்பான்மையும் நிலவ இடமில்லை. முகம்மது நபி அவர்கள் இம் மண்ணுலகில் பிறப்பதற்கு முன்னால் மக்கள் எண்ணற்ற வேறுபாடுகளின் இலக்கியமாக விளங்கினார்கள். குலப்பெருமை நாட்டு நலத்திற்குக் குந்தகமாக விளங்கிற்று. கருணை நபி அவர்கள் அம் மக்களிடையே சகோதரத்துவத்தையும் சகிப்புத் தன்மையையும் ஊட்டினார்கள். உயர்வு தாழ்வு மனப்பான்மையில் ஊறிக்கிடந்த அம் மக்களிடையே உலகமே கண்டு வியக்கும் வண்ணம் சமத்துவத்தை நிலைபெறச் செய்தார்கள். இஸ்லாம் காட்டும் அகில உலக சகோதரத்துவக் கொள்கைகளையும் அதன் சர்வ தேசீயப் பண்பையும் ஆராய்ந்துபார்த்தால் இன்றைய உலகை எதிர்நோக்கி நிற்கும் ஒரு சிக்கலான பிரச்னைக்கு எளிதில் வழிகாண முடியும். இஸ்லாத்தின் தத்துவம், அதன் சர்வ தேசீயத்தன்மை, இவற்றை கீழ்க்காணும் அடிகளில் அல்லாமா இக்பால் அழகுறத் தீட்டுகிறார்.

“கருத்தறியாது குழந்தை போலத் தவிக்கும் மனிதனே! உன்னையே நீ கௌரவப்படுத்தும் வகையை அறிந்துகொள். நீ ஒரு முஸ்லிமின் மகனானால் உனது பரம்பரைப் பெருமையையும் குடி உயர்வையும் வெருட்டி ஓட்டிவிடு. தான் அரபி நாட்டிலே பிறந்தவன், ஆகவே பிறரைவிட உயர்ந்தவன் என்ற எண்ணத்தை அராபியன் துறந்துவிடவேண்டும். நான் ஆப்கானியன் அல்ல; துருக்கியில் பிறந்தவனும் அல்ல; தார்த்தாரின் பரம்பரையில் தோன்றியவனுமல்ல. செழித்து விளங்கும் ஒரு பூங்காவிலே ஓங்கி நிற்கும் ஒரு அழகிய மரத்தின் ஒரு கிளையிலே மலர்ந்த மலர் நான். நம்மிடையே சாதி வேறுபாடும், நிற வேறுபாடும் கிடையாது. ஏனெனில் நாம் அனைவரும் புதியதொரு வசந்தத்திலே முருக்கவிழ்ந்த மலர்கள்”.

## தேசியம்

வெறிபிடித்த தேசியம் ஒரு பயமுறுத்தலே என்பதை பேராசிரியர் ஆர்னல்டு மிக அழகாக விளக்குகிறார். தான் வாழ்வதற்கும், வளர்வதற்கும், நிலைபெற்று நிற்பதற்கும் இராணுவ ஆற்றலை எதிர்நோக்கி நின்ற எத்தனையோ நாகரிகங்கள் அழிந்து பாழாகிவிட்டன என்பதை வரலாறு எடுத்துக் காட்டுகிறது. வெற்றியின் பலனாக எழும் பல பிரச்னைகளுக்கு வழி காணும் ஆற்றல் ஒரு போர் வீரனிடம் கிடையாது. சார்லமேன், தைமூர், ஏதென்ஸ் கொடுங்கோலர்கள், பிரிட்டனில் ஆண்ட பிளன்டாஜெனட் மன்னர்கள்—இவர்கள் அனைவரும் இறுதியில் கண்டது தோல்வியே. தாங்கள் மிகவும் கற்றறிந்த ஒன்றை—இராணுவ ஆட்சியை—எல்லாத் துறைகளிலும் அனுஷ்டிக்க முயன்றதே இந்த தோல்வியின் அடிப்படைக் காரணம். இன்று நமக்கு ஆத்மீக மாற்றம் வேண்டும். அதற்கு எல்லாவற்றிற்கும் மேலாக ஒன்றை நாம் கவனிக்க வேண்டும். இயந்திரபலம், தேசிய கொடி, பொருளாதாரம், விஞ்ஞானம் இவற்றிற்கு தெய்வ வழிபாடு செய்வது இன்று நம்மிடையே செல்வாக்குப்பெற்ற குறிக்கோள்களாக மாறிவிட்டன! இந்த கருத்தற்ற வழிபாடு நீக்கப்படவேண்டும். ஒரு உலக அரசியலை அமைப்பதற்கு நாட்டுப்பற்றை உள்ளத்தினின்று ஓட்டிவிட வேண்டும். ஆனால் வெற்றி மிக்க பல தேசிய வாதிகளுக்கு இது இயலாத காரியமாக இருக்கலாம்.

“கழிந்துபோன சில நூற்றாண்டுகளில் எந்தவித மெச்சத்தகுந்த பெருமையையும் பெற்றிராத பல நாடுகளில் வாழும் மக்களினால்தான் இன்றைய உலக ஐக்கியம் சாத்தியமாகும். ‘வழக்கொழிந்த தேசியத்திடம் நீங்கள் காதல் கொண்டு அதைக் கடைசிவரையில் கடைபிடிக்க வல்லரசுகள் உறுதியுடன் இருந்தால், தேசியத்தை அனுபவித்தறியா மக்களே பிரச்னை தீரவேண்டி நிற்கும் புது வழியைக் காட்டமுடியும். இதுவே மகிழ்ச்சி மிக்கதொரு மாற்றம். உலக ஐக்கியம் எப்படியும் வந்தே தீரவேண்டும். அந்த ஐக்கியம் அமைதியாக, எந்தவித தூண்டுதலுமின்றி வந்து நிலவவேண்டும். இன்றைய உலகின் மாபெரும் தேவை, அறிவுக்கு அப்பாற்பட்ட விஷயங்களில் அசையா நம்பிக்கை மீண்டும் பிறக்கவேண்டும் என்பதே. நம்மிடையே ஒற்றுமை நிலவவேண்டும். நமது முக்கிய நோக்கம் ஒரே உலகம் அமைத்தல்தான். மனித சிந்தனைக்கப்பாற்பட்ட கண்டறிய முடியாத கடவுளிடம் உள்ள ஆழ்ந்த நம்பிக்கை உள்ளத்தில் இடம்பெற, அதன்மூலம் மனிதர் அனைவரும் அன்புத் தளையால் இணைக்கப்படாதவரை, மனித சகோதரத்துவம் என்பது வெற்றி தராத ஒரு குறிக்கோளே.”

பேராசிரியரின் மேற்கண்ட கருத்து இணையற்ற நபி முகம்மது (ஸல்) அவர்கள் 1400 ஆண்டுகளுக்குமுன் உலகிற்களித்த இஸ்லாமிய சகோதரத்வத்தை எவ்வளவு அழகாக விளக்குகிறது! நபிபிரான் அவர்கள் கருத்துப்படி ஒரு முஸ்லிம் உலகனைத்துக்கும் உரியவன்; அவன் ஒரு உலகப் பிரஜை; அகில உலக சகோதரத்வத்தின் நிலைக்களன். இந்தக் கொள்கை கால வெள்ளத்தினால் அடித்து செல்லப்படாதது. அவர்களது சர்வ தேசியக் கொள்கை.என்றும் உலகிற்கு வழிகாட்டும், இணையற்ற அணையா ஒளி. எவ்வித வேறுபாடுமின்றி சோதர மக்கள் அனைவருக்கும் அன்பு காட்டி, தக்கது செய்யும் தன்மையை இங்கே காணுகிறோம். அசைக்கமுடியாத நன்னம்பிக்கையினின்று தோன்றியதே இந்த பரந்த மனப்பண்பு.

## சர்வ தேசியம்

இஸ்லாத்தின் சர்வ தேசியத் தன்மையை மிகவும் அழகாக விளக்குகிறார் பேராசிரியர் ஆர்னால்டு பின்வரும் வரிகளில்: ''இவை எல்லாவற்றையும்விட இஸ்லாமிய வரலாற்றில் ஒரு மகத்தானமுக்கியத்துவம்இருக்கிறது. இறைவன் ஒருவனே என்று நம்பும் மக்கள் ஆண்டுக்கொருமுறை ஆண்டவனை வழிபட உலகில் பல்வேறு பகுதியினின்றும் புனித மக்கா வந்து கூடுகின்றனர். நம்பிக்கைக்கொண்ட மக்கள் மனதிலே சகோதரத்துவத்தின் உயர்வையும், பிறநாட்டு மக்களது பழக்க வழக்கங்களைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பினையும் ஒருசேர ஊட்ட இதைவிட உயர்ந்ததொரு வழியை வேறு எந்த சமயமும் வகுக்கவில்லை என்று ஐயமின்றி துணிந்து கூறலாம். பல்வேறு நாட்டினர், மொழியினர் அனைவரும் இங்கு சேர்ந்து தொழுகின்றனர். அகண்டு கிடக்கும் அமெரிகாவின் மேற்கு கடற்கரையிலே வாழும் கரிய நீக்ரோ, தூரக் கிழக்கில் வாழும் மஞ்சள் நிற மனிதனுடன் இங்கு கொஞ்சி உறவாடுகிறான். நாகரிகம் பெற்ற அழகிய துருக்கி முஸ்லிம், தனக்கு அருகே நிற்கும் மலாய் முஸ்லிமுடன் அன்பொழுகப் பழகுகிறான். மொழி, நிலம், நாடு இவற்றிடையே எண்ணற்ற வேறுபாடு இருப்பினும், அதிசயப்படத்தக்க சோதரத்வத்தை இங்கே காணுகிறோம்.

''மொரோக்கோ முதல் ஷாங்கே, இந்தோனேஷியாவரை முஸ்லிம்கள் பரந்து வாழ்கின்றனர். இவர்கள் அனைவரும் ஒன்றுபட்டு, ஓரே உலகம் அமைத்து வளம்பெற்று வாழ வழி செய்யும் சந்தர்ப்பங்கள் பல இருக்கின்றன. அகில உலக சகோதரத்துவத்தை அடையச் செய்யும் நன்முயற்சியில் இவர்கள் பிரதான பங்கு பெற மேண்டும்.''

'ஆதத்தின் பிள்ளைகள் அனைவரும் ஒரு இயந்திரத்தின் பிரிக்க இயலாத பல பகுதிகளைப் போன்றவர்கள். மனிதர்களின் அடிப்படை உணர்ச்சி ஒன்றே' என்று சஅதி அவர்கள் கூறியது ஊன்றி உணருவதற்குரியது. இன்று உலகில் முன்னேற்றமடைந்து சீரும் சிறப்பும் பெற்று விளங்கும் நாடுகள் தங்களது வளம்பெருத சோதரநாட்டு மக்களது இன்பத்திலும் துன்பத்திலும் பங்கு கொண்டு உலக ஒற்றுமைக்கு வழி வகுக்க வேண்டும். ஒருவரை மற்றொருவர் நன்கு அறிந்துகொண்டு, அவரது கொள்கைக்கு மதிப்பளிக்கவேண்டும். பேராசிரியர் டாக்டர் கான்சந்த் அவர்கள் கூறுவதைப்போல, 'போரிலே சிக்கிச் சீரழிந்த இன்றைய உலகைப் புனர் நிர்மாணம் செய்து முன்னேற்ற இஸ்லாத்தின் இணையற்ற உதவி தேவை'.



<u>சீறாவின்பம்</u>

# உமறுப் புலவரின் உவமையணி

அ. ஷர்புத்தீன்

முகம்மது நபியவர்களின் விருப்பத்திற்கிணங்கிய அபூதாலிப், வணிகம் நடாத்த பொருள்களையோ அல்லது சரக்குகளையோ பெறும் பொருட்டு முகம்மது நபியை அழைத்துக் கொண்டு சீமாட்டி கதீஜாவின் இல்லத்திற்கு வந்தார். கதீஜா பிராட்டியார் ஏற்கெனவே முகம்மது நபியவர்களையும், அபூதாலிபையும் வரவேற்று, விருந்தளித்து உபசரித்த பின், அவர்கள் வியாபாரம் செய்வதற்காக ஆயிரம் ரூபாய்கள் பெறும்படியான துணி முதலிய சரக்குகளையும், அவைகளை ஷாம் தேசத்துக்குச் சுமந்து செல்லுவதற்காக ஒட்டகங்களையும், முகம்மது நபிக்குத் துணை புரிய ''மைசறா'' என்பவரையும், பணிபுரிய பணியாட்களையும் தந்துதவினார், செல்வி கதீஜா.

வணிகப் பொருள்களை ஒட்டகங்களின் மீது ஏற்றிக்கொண்டு தனது துணையாள், பணியாட்களோடு கதீஜாவின் வீட்டை நீங்கிப் புறப்பட்ட முகம்மதுநபியவர்கள் தமது பொருள்களோடு குளக்கரைகளையும் ஆறுகளையும் மலர்க்காடுகளையும் வாவிகளையும் கடந்து சென்றார்.

## பாலை நிலம்

முகம்மது நபி தமது பரிவாரங்களோடு ஷாம் தேசத்திற்குப் போகும் வழியில் கொடிய பாலை நிலம் குறிக்கிட்டது. அப்பாலையோ, மிகவும் கொடியது அங்கு மருந்துக்குக்கூட ஒரு சொட்டுத் தண்ணீரையும் காண முடியாது. நெருப்பை உமிழும் பாலை நிலத்தில் காய்ந்துபோன மரங்களும் கிடையா. மரங்கள் இருந்தாலன்றோ நிழலைக் காண முடியும? அங்கு துளி நிழலைக் கூட காணமுடியவில்லை. அப்பாலை நிலத்தில் மழை பெய்த காலத்தில் முளைத்திருந்த கள்ளி முதலிய செடிகள் காய்ந்து கருகின உலர்ந்து கிடந்தன. அந்தக் கள்ளியின் வேரடியில் குடியிருந்த ஐந்து தலைகளையுடைய நாகம் வற்றிப்போய் அதன் தலையில் உள்ள மாணிக்கம் வெயிலின் கொடுமையால் வெடித்துச் சுக்கு நூறாகிக் கிடந்தனவாம். இத்தகைய கடுஞ்சுரத்தைக் கடந்து ஷாம் தேசத்திற்குச் செல்லும் வணிகர்கள் குடிக்கத் தண்ணீர் இல்லாமல் துன்புறும்

போது, அவர்களின் கண்களுக்குத் தோன்றித் தோன்றி மறையும் கானலைப் புதுப் புனலெனக் கருதி ஓடோடிப் பார்த்து, இளைத்து ஏமாற்றத்தை யடைந்தனராம். இவர்கள் படும் துன்பத்தை நமது கவிஞர்,

" பாடுறு புனலைத் தெவ்வொரு காதம்
படுபரற் பரப்புநாற் றிசைக்கு
ஓடுவர் திரும்பி மீள்குவர் அடிசுட்
டுச்சியும் வெதுப்புற வுலர்ந்து
வாடுவர் துகில்கீழ்ப் படுத்தியோட் டகத்
வயிற்றிடை தலைநுழைத் திடுவர் [தீன்
தேடிடும் பொருட்கோ வுயிரிழப் பதற்கோ
செறிந்திவ ணடைந்தன மென்பார் "

(பாடுறு-வருத்தம் பொருந்திய, படு பரற்-பரல் கற்கள் பொருந்திய, வெதுப்பி-வெப்பம், துகில்-துணி, இவண்-இவ்விடம்.)

கண்களுக்குத் தோன்றும் கானலை தண்ணீரெனக் கருதி பரல் கற்கள் பரந்துள்ள பாலையில் ஓடுவர், திரும்பி மீள்குவர். இதனால் இளைத்து, நாவுலர்ந்து வெயிலின் கொடுமை தாங்காமல் தமது துணிகளைப் பரப்பி அதில் நின்றுகொண்டும், ஒட்டகத்தின் நிழலில் நுழைந்து கொண்டும் துன்பமடையும் வணிகர்கள், தாம் 'இங்கு வந்தது பொருள் தேடுவதற்கோ அன்றி உயிர் இழப்பதற்கோ?' என்று எண்ணி ஏங்கலாயினர்.

இவ்வாறு துன்பமடையும் மக்களைக் கண்டு ஆற்றாத திரு நபியவர்கள் மனம் வருந்தினர்; மக்களின் துன்பத்தைப் போக்க வழிகாண விரைந்தார்; பிரார்த்தனைப் புரிந்தார். பிரார்த்தனையின் பயனாகப் பாலையில் மழை கொட்டிற்று; புனல் பெருகிற்று; மடிந்துபோன கள்ளிகளும் மலர்ச் செடிகளும் முளைத்தன; பாலைகள் சோலையாக மாறின. வணிகர்கள் இளைப்பாறிய பின் அவ்விடத்தைவிட்டு நீங்கி நடந்தனர் ஷாம் நகரை நோக்கி.

## மாலைப்பொழுது

வணிகர்கள் ஒரு காத தொலை தூரம் சென்றனர். மாலைப் பொழுது வந்தது; ஆதவன் தன்னுயிரக் கிரணங்களோடு குடகடலில் குதித்தான். அப்பொழுதிருந்த சூரியன், வானம், மாலைப் பொழுது இவைகளின் தோற்றம் எவ்வாறு இருந்தது தெரியுமா? நமது புரட்சிக் கவிஞர் கூறியதைப் போல,

" தங்கத்தை உருக்கி விட்ட
வானோடை தன்னி லேஓர்
செங்கதிர் மாணிக்கத்துச்
செழும்பழம் முழுகும் மாலை "

தங்கத்தை உருக்கி விட்டாற் போன்ற நிறத்தையுடைய வானமாகிய ஓடையின்கண் ஒப்பற்ற செங்கதிர்களைப் பரப்பும் மாணிக்கமாகிய செவ்விய பழம் கடலின்கண் மூழ்குவதைப் போன்றிருந்ததாம் மாலைப்பொழுது!

## நதியின் தோற்றம்

கதிரவன் கடலில் மூழ்கியதால் காரிருள் கப்பியது. உலகை அப்போது முகம்மது நபியும், அவர்களின் சகாக்களும் மற்ற வணிகர்களும் அன்றைய இராப் பொழுதைக் கழிப்பதற்காக ஒரு நதியின் ஓரத்தில் உள்ள அடர்ந்த மரத்தடியில் தங்கினர்; அங்கேயே உறங்கினர்.



அவர்கள் உறங்கும்போது நடு நிசியில் ஆற்றில் வெள்ளம் பெருகிற்று. அவ்வெள்ளமோ என்றும் கண்டிராத, கேட்டிராத வெள்ளம்! அது மரஞ்செடிகள் எல்லாவற்றையும் வேரொடு பெயர்த்துக்கொண்டு செல்லுகின்றது. இக் காட்சியை உமறுப்புலவர்,

"கரை சுழிந் தெறிந்து நீள் கயங்க ளாக்கின
திரை யெறி கயத்தினைத் திடர தாக்கின
விரை கமழ் சோலைவே ரறுத்து வீழ்த்தின
வரைகளைப் பிடுங்கின மலிந்த நீத்தமே"

(கயங்கள்-குளங்கள். திரை-அலை. திடர்-மேடு. விரை-நறுமணம். வரை-மலை. நீத்தம்-வெள்ளம்.)

"பெருக்கெடுத்தோடும் வெள்ளம், கரைகளை சுழிகளையுடைய ஆழமாகிய குளங்களாக்கின; அலைகளையுடைய குளங்களைக் குன்றுகளாக மாற்றின. நறுமணங்கமழும் பூஞ்சோலைகளை வேரோடு பெயர்த்து வீழ்த்தின; மலைகளைப் பெயர்த்தெறிந்தன" என்றார்.

## ஷாம் நகருக்குச் செல்லும் பாதையின் தோற்றம்

நதியில் பெருக்கெடுத்தோடும் வெள்ளம் வடியும் வரை அவ்விடத்தே மூன்று நாட்கள் தங்கினர் வணிகர்களும் நபிமணியும். பின்பு அவர்கள் ஷாம் நகருங்குச் செல்லுகின்றனர். அவர்கள் செல்லும் பாதை யோரங்களில் இயற்கையழகு கொட்டிக்கிடக்கின்றது. அதனைக் கண்டு அனுபவித்துக் கொண்டே செல்லுகின்றனர்.

பாதையோரத்தில் ஒரு பக்கம் வாழைத் தோட்டங்கள் இருக்கின்றன. அத்தோட்டத்தில் வாழை மரங்கள் பூக்களையும் குலைகளையும் ஈன்றுள்ளன. அவைகள் நாயகமவர்கள் அவ்வழி வருவதைக் கேட்டதும் அன்னாரைப் பார்ப்பதற்காகத் தமது உள்ளிடங்களை விட்டு விரைவில் வெளித் தோன்றி, அன்னாரைக் கண்டு துதிப்பன போன்றிருக்கின்றனவாம்.

பாதையின் மறு பக்கம், மா, பலா, முதலிய மரங்கள் அடர்ந்து வளர்ந்து தோன்றுகின்றன. அம் மரங்களில் பழங்கள் குலை குலைகளாகத் தொங்கி காற்றில் அசைந்து கொண்டிருக்கின்றன. அவைகள் அசையும் தோற்றம், நாயகமவர்களின் வருகையைக் கண்ட மரங்கள் தமது கைகளை அசைத்து அவர்களை 'வருக! வருக!!' என்று அழைப்பன போன்றிருக்கின்றனவாம்!

இன்னும் அவ்வழியில் மலர்க் காடுகளும் தடாகங்களும் பரந்து கிடக்கின்றன. மலர்க் காடுகளிலுள்ள செடி, கொடிகளில் பூத்துள்ள மலர்களில் நறுமணங் கமழுகின்றன. மணங் கமழுவதானது நபி மணியவர்களின் மேனி முழுதும் நறுமணம் வீசுகிறது என்பதைக் காட்டுவதைப் போன்றிருக்கின்றதாம்.

மலர்க் காடுகளில் வாழும் மயில்கள் தமது தோகைகளை விரித்தாடுகின்றன. அவைகளின் தோற்றம்,

" பாட லத்தரு நிமுளமா கதக்கதிர் படர
வாடி நிற்பன முகம்மதைக் கண்டகங்
[களித்து
விடின் மென்சிறை பட்டகண் ணிணைத்தை
[யும் விழித்துக்
கூடி நோக்குவ தொத்தன களிமயிற்
[கூட்டம் "

(பாடலம்-குளஞ்சிவப்பு. தரு-மரம். அகம்-மனம். களித்து-மகிழ்ந்து. மென்சிறை-மெல்லிய சிறகு.)

" களிப்போடு ஆடும் மயில்கள், பசிய மாகதக் கதிர் பரப்பி நிற்கும் முகம்மது நபியவர்களைக் கண்டு மனங்களித்து, இணையற்ற தமது மென்மையாகிய சிறகுகளில் அமைந்துள்ள புள்ளிகளாகிய கண்களை விழித்து ஒன்றுகக் கூட்டிப்பார்ப்பன போன்றிருந்தன " என்றூர் உமறுப் புலவர்.





# பாக்கிஸ்தான் 'டயரி'

- மியான் இப்திகருத்தீன் வெளியேற்றம்
- சர்தார் பட்டேலைப் பற்றிப் பாக்கிஸ்தானிகள்

சென்ற ஜனவரி மாதம் 17-ந்தேதி யன்று மியான் இப்திகருத்தீனும் சர்தார் ஷவுக்கத் ஹயாத்கானும் பாக்கிஸ்தான் பார்லிமெண்டின் முஸ்லிம் லீக் கட்சியிலிருந்து வெளியேற்றப் பெற்றிருக்கின்றனர். இந்த இரண்டு பேர்களையும் முஸ்லிம் லீகிலிருந்து விலக்கிவிட வேண்டுமென்று தீர்மானம் கொண்டு வந்தவர்களுள், மியான் மும்தாஜ் தௌலத்தானு, பேகம் ஷாநவாஸ்,ஜனுப் முஹம்மது ஹாஷிம் கஸ்தார் ஆகியவர்கள் முக்கியமானவர்கள்.

முஸ்லிம் லீக் பார்லிமெண்டரி கட்சியின் தலைவராகிய லியாக்கத் அலீகான் அவர்களின் தலைமையின் கீழ் நடந்த கூட்டத்திலேயே இவ்விருவரும் விலக்கப்பட வேண்டுமென்னும் தீர்மானம் நிறைவேறியது. மியான் இப்திகருத்தீனும் சர்தார் ஷவுக்கத் ஹயாத்கானும் முஸ்லிம் லீகின் பார்லிமெண்டரி கட்சியிலிருந்து விலக்கப்பட்டிருப்பதன் விளைவாக, முஸ்லிம் லீகிலிருந்தும் வெளியேற்றப்படுவார்கள் என்று தெரிகிறது.

இவர்கள் லீகிலிருந்து வெளியேற்றப்படுவதற்கு என்ன காரணம் ?

பாக்கிஸ்தான் பார்லிமெண்டில் ஜனவரி 4, 6 தேதிகளில் அவ்விருவரும் பேசிய பேச்சு, கட்சியின் ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் மீறியவை என்று மேற்படி தீர்மானம் கூறுகிறது. அதாவது, பாக்கிஸ்தான் சர்க்காரின் பாதுகாப்புச் சட்டங்கள் நாட்டுமக்களின் சாதாரண பிரஜா உரிமைகளையும் பறிப்பதாக இருக்கின்றனவென்று கூறி, சர்க்காரை அவர்கள் வன்மையாகக் கண்டித்தார்கள்.

பாக்கிஸ்தான் பார்லிமெண்டுக்கு சமஸ்தானங்களிலிருந்து வரவேண்டிய பிரதிநிதிகளை சமஸ்தான மன்னர்களே நியமிக்கலாம் என்று பாக்கிஸ்தான் சர்க்கார் தீர்மானித்துள்ளது. இதை மியான் இப்திகருத்தீன் அவர்கள் வன்மையாகக் கண்டித்த போது, கஷ்மீர் பிரச்னையைச் சுட்டிக் காட்டினர். அதாவது, சமஸ்தான விஷயங்களில மன்னர்களை தீர்ப்புக் கூறலாம் என்றால், கஷ்மீர் மன்னரின் விருப்பப்படி அந்த சமஸ்தானம் இந்தியாவுடன் சேர்ந்தது சரி என்றுதானே ஆகிறது ? ஆனால் கஷ்மீர் தகராறில மக்களின் தீர்ப்புக்கு கட்டுப்பட வேண்டுமேயன்றி மன்னரின் கருத்தைப் பொருட்படுத்தக் கூடாது என்பதல்லவா பாக்கிஸ்தானின் வாதம்? எனவே சமஸ்தானப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதில் சர்க்கார் முன்னுக்

குப் பின் முரணாக நடந்து கொள்ளுகிறதே என்று மியான் சாஹிப் சுட்டிக் காட்டினார். இவருடைய பேச்சு, பாக்கிஸ்தான் பார்லிமெண்டரி கட்சியின் கொள்கைகளுக்கு முரணானதென்று அந்த வெளியேற்றத் தீர்மானம் கூறுகிறது.

இந்தியத் துணைக்கண்டத்திலே தீவிர அரசியல் வாதிகளாகத் திகழ்கின்ற இளைஞர்களுள் மியான் இப்திகருத்தீனும் ஒருவர். 1945-ம் ஆண்டிலேதான் அவர் முஸ்லிம் லீகில் சேர்ந்தார். அதற்கு முன்வரை அவர் பஞ்சாபிலே பண்டித நேருவின் நெருங்கிய நண்பராகவும் மகாத்மா காந்தியின் மாபெரும் சீடராகவும் இருந்தார்.

சென்ற காலத்தில் காங்கிரஸிலிருந்து கம்யூனிஸ்டுகள் பலவந்தமாக வெளியேற்றப்பட்டபோதுதான் இவர் காங்கிரஸை விட்டுப் பிரிந்தார். அதன் பிறகு பஞ்சாப் மாகாணத்திலே பிற்போக்கு ஆட்சியையும் பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தையும் எதிர்த்து முஸ்லிம் லீக் தனது புரட்சிக் கொடியை உயர்த்திய காலத்தில்தான் முஸ்லிம் லீக் தனது வழியில் வருவதாக நினைத்து, அதில் சேர்ந்து கொண்டார். ஆனால் அவரே இப்போது முஸ்லிம் லீகிலிருந்து வெளியேற்றப் பெற்றிருக்கின்றார் என்பதிலிருந்து அவருடைய அதிதீவிரப் போக்கும் புரட்சி மனப்பான்மையும் முன்போலவே இருக்கின்றனவென்பது தெளிவு.

இப்போது பாக்கிஸ்தானிலே மியான் சாஹிபவர்கள் ஒரு கம்யூனிஸ்டாகவே கருதப்படுகின்றார். அவர் தன்னைத் தானே கம்யூனிஸ்ட் என்று சொல்லிக் கொள்ளா விட்டாலும், அவருடைய அரசியல் விரோதிகள் அவரையொரு கம்யூனிஸ்டு என்றே அழைக்கின்றனர்.

மியான் சாஹிபுக்குப் பாக்கிஸ்தான் பார்லிமெண்டில் ஆதரவில்லாவிட்டாலும், பஞ்சாப் விவசாயிகளிடையே மிகுந்த ஆதரவிருக்கிறது. ஏழைத் தொழிலாளிகளிடையே சிறந்த செல்வாக்கு இருக்கின்றது. இவர் போன்ற தீவிரவாதிகளின் தலைமையின் கீழ் பாக்கிஸ்தானிலே முஸ்லிம் லீகுக்கு எதிர்க் கட்சியொன்று உருவாகுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

## சர்தாரின் மனமாற்றம்

இந்தியா—பாக்கிஸ்தான் தகராறுகளையெல்லாம் சண்டையின்றி சமாதான முறையிலேயே தீர்த்துக் கொள்வது என்ற இந்திய சர்க்காரின் சமாதான சமிக்ஞையைப்பற்றிப் பாக்கிஸ்தானிகள் பலவிதமாகப் பேசிக் கொண்டாலும், சர்தார் பட்டேல் அவர்கள் அண்மையில் பேசிய சில பேச்சுக்களிலிருந்து அவரது மனத்திலே ஒரு மாபெரும் மாறுதல் தோன்றியிருப்பதாகவே பலர் நினைக்கின்றனர். அதாவது, பாக்கிஸ்தானிகளைப் போரிலே வெல்வதைவிட அன்பாலே வெல்வது மிக எளிது என்று அவர் உணர்ந்து கொண்டதாகப் பாக்கிஸ்தானிகள் நம்புகின்றார்கள்.

Edited & Published by M. R. M. Thahir, 132. Broadway. Madras 1 & Printed by M M.
kaimalai at the Senguntha Mithran Press, 33, Armenian Street, Madras 1.

